# இளமைப் பருவத்தில் ஓர் இணையற்ற பழக்கம்

இளம் பருவத்தில் தொடங்கும் பழக்கம் வாழ்நாள் முழுவதும் தொடரும். இதனை உணர்ந்தே சிறுவர் சிறுமியர்க்கென்றே சிறப்பான ஒரு திட்டத்தைக் கரூர் வைஸ்யா பாங்க் தொடங்கியுள்ளது. அதுவே ஜம்போ டெபாஸிட் திட்டம்

இன்றே உங்கள் அன்புக் குழந்தையின் பெயரால் ஜம்போ டெபாஸிட் கணக்கு ஒன்றைத் துவக்கி, அழகிய ஜம்போ யானைப் பொம்மையைப் பெறுங்கள். இந்தப் பொம்மை காசுகளால் நிறைந்ததும் பாங்கிக்குக் கொண்டுவாருங்கள். அந்தப் பணம் உங்கள் குழந்தையின் கணக்கில் சேர்க்கப்படும். சேமிப்பு பெருகும்.






## ஜம்போ டெபாஸிட் திட்டம் — குழந்தைகளுக்கான குதூகலத் திட்டம்

K/KVB/5000/77.




## கரூர் வைஸ்யா பாங்க் லிமிடெட்

பதிவு அலுவலகம் : கரூர் 639 001

கே. வி. ராகவாச்சாரி
சேர்மன்

மகிழ்ச்சியில் திளைத்திட
பிரித்துச் சுவையுங்கள்

Parry's

பைன் ஆப்பிள், ஆரஞ்சு,
லைம், ஸ்ட்ராபெர்ரி,
மாங்கோ லிக்கர்கள் ...
தித்திக்கும் அத்தனையும்
உங்கள் மகிழ்ச்சிக்
காகவே.

Parry's





மிட்டாய்கள். டாஃபிகள்

பாரீஸ் கன்பெக்ஷனரி லிமிடெட்

PRS/2771

# உங்கள் வாழ்வில் சிறு நாணயங்கள் ஒரு பெரும் மாற்றத்தை ஏற்படுத்தலாம் !





உங்கள் கவனம் முழு ரூபாய்களின் மீதிருக்கும் போது, சிறு நாணயங்கள் உங்கள் கவனத்தி லிருந்து தப்பிவிட வாய்ப்புண்டு. உங்கள் குடும் பச் செலவில் அன்றாடம் மீறும் சிறு நாணயங் களான 5, 10, 25 பைசாக்களைக் கொண்டு கணி சமான சேமிப்புத் தொகையாக்க வழியுண்டு என்பதை தாங்கள் அறிவீர்களா ?

எங்கள் "பாலக்ஷேமா டெபாசிட் திட்டம்" சிறு சிறு சேமிப்புகளைக் காலப் போக்கில் பெருந் தொகையாக பெருக்கிவிடும்.

உங்கள் குழந்தைகளுக்கு சேமிப்பின் உயர் வைக்கற்றுக் கொடுங்கள். நாங்கள் கொடுக்கும் கவர்ச்சிகரமான சேமிப்புப் பெட்டியில் நாண யங்களைப் போட அவர்கள் மிகவும் விரும்புவார் கள். எங்களது "பாலக்ஷேமா" ஏஜண்ட் உங்கள் வீடு தேடி வந்து, சேமிப்புப் பெட்டியிலிருக்கும் பணத்தைப் பெற்றுக் கொண்டு, அதற்குரிய ரசீதையும் கொடுப்பார்.

காலப் போக்கில், உங்கள் சிறு சேமிப்பு பெருந் தொகையாகி விடுவதைக் கண்டு நீங்களே ஆச்சர்ய மடைவீர்கள்!




## பாலக்ஷேமா
## டெபாசி ட்திட்டம்




## கனரா பாங்க்

(பாரத அரசாங்கத்தின் முழு உடைமை)

தலைமையகம் பெங்களூர்-560 002

**வளர்ச்சிக்கெனவே சேவை–சேவைக்கெனவே வளர்ச்சி**

maa CB TAM 2 B

# அம்புலிமாமா

## டிசம்பர் – 1977



Printed by B. V. REDDI at Prasad Process Private Ltd., and Published by B. VISWANATHA REDDI for CHANDAMAMA CHILDREN'S TRUST FUND (Prop. of Chandamama Publications) 2 & 3, Arcot Road, Madras-600 026 (India). Controlling Editor: NAGI REDDI. CHANDAMAMA is published monthly and distributed in U.S.A. by Chandamama Distributors, West Chester PA 19380. Subscription 1 year $ 6-50. Second Class Postage paid at West Chester, PA.

# அம்புலிமாமா

நிறுவனர்: 'சக்கரபாணி'

நிர்வாக ஆசிரியர்: நாகிரெட்டி

பெண்களைக் காவல் காத்து வருவதால் மட்டும் அவர்களுக்குப் பாதுகாப்பு ஏற்பட்டு விட்டதாகக் கூற முடியுமா? அவர்களைக் காப்பது அவர்களது கற்பு நெறியே. இதனையே வள்ளுவரும்.

சிறைகாக்குங் காப்பு எவன் செய்யும் மகளிர்
நிறைகாக்குங் காப்பே தலை

எனக் கூறினர். பெண்களைப் பாதுகாப்பது அவர்களது கற்பு என்னும் உயரிய பண்பு. அது இருக்கையில் அவர்களுக்கு யாராலும் எவ்விதத் தீங்கும் இழைத்து விட முடியாது. அவர்களுக்காக எவ்விதக் காவலும் கட்டுப்பாடுகளும் விதித்து முன்னச்சரிகை நடவடிக்கைகளையும் மேற்கொள்ள வேண்டியதும் இல்லை என வள்ளுவர் கூறி கற்பின் பெருமையை அறிவுறுத்தியுள்ளார்.

மதிமுகம் 61 டிசம்பர் '77 புன்னகை: 6

தனிப் பிரதி ரூ. 1-25 வருட சந்தா ரூ. 15-00





# ஆன்றோர் மொழி

ஹர்ஷ காமஸ்ச தர்ப்பஸ்ச
தர்மா க்ரோத க்ஷமோ தமஹ
அர்த்தாதேதானி சர்வாணி
பிரவர்த்தந்தே...

[மகிழ்ச்சி, காமம், அகந்தை, தருமம், கோபம், பொறுமை, மமதை போன்றவை பணம் உள்ள இடத்திலே தென்படும்]

பீடாகார மமீஸ்ராணும்
யத்ஸ்யாத் கர்த்தவ்யமேவ தத்

[எதிரிகளுக்கு எவையெல்லாம் இடைஞ்சல்களாகுமோ அவற்றை எல்லாம் செய்ய வேண்டும்]

அயுத்யமானம் பிரச்சன்னம்
ப்ராஞ்ஜலிம் சரணகதம்
பலாந்தம் ப்ரமத்தம்தா
நத்வம் ஹந்துமிஹர்ஹஸி

[போருக்குத் தயாராக இல்லாதவனையும், ஒளிந்து கொண்டிருப்பவனையும், காலடியில் விழுந்து வணங்கியவனையும் புகலிடம் கேட்டவனையும் நீ கொல்லக் கூடாது]

ந ரணே சக்யதே ஜேதும்
விஞ யுத்தேனே வாக்பலாத்.

[போரில் ஆள் பலத்தால் வெல்ல முடியுமேயல்லாது வாய்ச் சொல்லின் பலத்தால் அல்ல]




இருட்டியதும் அரிமர்த்தனன் தன் ஆந்தைக் கூட்டத்தோடு போய் மரத்தின் மீதுள்ள காக்கைக் கூட்டத்தைத் தாக்கச் சென்றது. அப்போது அது ''காக்கைக் கூட்டத்திடையே அபிப்பிராய பேதம் ஏற்பட்டிருப்பதால் நமது முயற்சி வெற்றியே பெறும்'' என்றது.

ஆந்தைக் கூட்டம் மரத்தை அடைந்த போது ஒரு காக்கை கூட இல்லாது போனதும் மரத்தடியே குற்றுயிராய்க் கிடந்து முனகிக் கொண்டிருக்கும் ஸ்திரஜீவியை பார்த்து ஆந்தைகள் அதனைத் தாக்க முயன்ற போது அது மெல்லிய குரலில் ''ஐயோ, என்னைக் கொல்லாதீர்கள். என்னை உங்கள் அரசனின் முன் கொண்டு போய் நிறுத்துங்கள். நான் அவரிடம் பல விஷயங்களைக் கூற வேண்டும்'' என்றது. ஆந்தைகளும் தம் அரசனிடம் ஸ்திரஜீவி கூறியதைச் சொல்லவே அரிமர்த்தனனும் ஸ்திரஜீவி கிடக்கும் இடத்திற்கு வந்து ''ஐயா, நீங்கள் காக்கைகளிலேயே மிகவும் வயதானவர். அனுபவம் பெற்றவர் ஏன் இப்படி காயமுற்று விழுந்து கிடக்கிறீர்கள்?'' என்று கேட்டது.

ஸ்திரஜீவியும் ''அந்த மேகவர்ணன் நீங்களெல்லாம் பல காக்கைகளைக் கொன்று விட்டதால் உங்கள் குகையைத் தாக்கி உங்களையெல்லாம் ஒழித்து விடுவதாகத் தீர்மானித்தது. அப்போது நான் நீங்கள் மிகவும் பலசாலிகள் என்றும் உங்களோடு சமாதானமாகப் போகும் படியும் கூறினேன். என் நல்ல வார்த்தை அதன் காதில் ஏறவில்லை. என் மேல் கோபப்பட்டு என்னைத் தாக்கிக் குத்திக்



என்றது. அரிமர்த்தனனும் தன் மந்திரிகளுடன் கலந்து ஆலோசிக்கலானான். அப்போது ஒரு மந்திரி ''இவனை அடித்துக் கொன்று விடுங்கள். இவனை வளர்ப்பது பாம்பை வளர்ப்பதற்குச் சமம். இவன் காயங்கள் ஆறியதும் இங்கிருந்து பறந்து போய் தன் கூட்டத்தவருடன் சேரமாட்டான் என்பது என்ன நிச்சயம்? பாம்பை வளர்த்தால் அது விஷத்தைத் தான் கக்கும். இதில் சந்தேகமே இல்லை. ஒரு பிராமணன் சுயநலம் கருதி பாம்பை வளர்த்து சீரழிந்த கதையை கேட்டதில்லையா? கூறுகிறேன் கேளுங்கள்'' எனக் கூறி கதை சொல்லலாயிற்று.

ஹரிதத்தன் என்ற பிராம்மணனிடம் ஒரு நிலம் இருந்தது. அதில் ஒரு பாம்புப் புற்று இருந்தது. அந்த நிலத்தில் விளைவது அவனுக்கும் அவனது மனைவிக்கும் மகனுக்கும் அரை வயிறு சாப்பிட போதுமானதாக இருந்தது.

ஒரு நாள் அவன் தன் நிலத்தில் வேலை செய்து விட்டு இளைப்பாறிக் கொண்டிருக்கையில் அங்குள்ள புற்றிலிருந்து ஒரு நாகப் பாம்பு வருவதைக் கண்டான்.

அவன் அதனை நாகராஜன் என எண்ணி வணங்கி ஓடிப் போய் ஒரு சிறு கிண்ணியில் பால் கொண்டு வந்து அதன் முன் வைத்தான்.

கொதறி இப்படி குற்றுயிராகப் போட்டு என்னை குலத் துரோகி என வெறுத்து விட்டு 'நீ உன் புதிய எஜமானனை ஆந்தையிடமே இரு' எனக் கூறி விட்டுத் தன் கூட்டத்தவருடன் எங்கோ பறந்து போய் விட்டது'' என்றது.

அரிமர்த்தனனும் ''காக்கைகள் எங்கே போயிருக்கின்றன என்பது எனக்குத் தெரியும். நீ கவலைப் படாதே. எங்களுடனேயே இருக்கலாம்! நான் மேகவர்ணத்தைப் பார்த்துக் கொள்கிறேன்'' என்றது. ஸ்திரஜீவியும் ''மன்னனே. நீதான் எனக்கு புகலிடம் கொடுக்க வேண்டும். எனக்கு யாருமே இல்லை. நீதான் கதி''



Scanned by CamScanner

நாகப் பாம்பும் அந்தப் பாலைக் குடித்து விட்டுப் போயிற்று. மறு நாள் காலையில் ஹரிதத்தன் பாம்பின் புற்றருகே போன போது அங்கு ஒரு தங்க நாணயம் இருப்பதைக் கண்டான். அது நாக ராஜன் தனக்கு அளித்தது என எண்ணி எடுத்துக் கொண்டான். அவன் தினமும் அந்தப் பாம்பிற்கு பால் கொடுக்க அதுவும் தினமும் ஒரு தங்க நாணயமாகக் கொடுத்து வந்தது.

ஒரு நாள் அந்த பிராமணன் வெளியூர் போக வேண்டி வரவே பாம்பிற்குப் பால் கொடுக்கும் வேலையைத் தன் மகனிடம் ஒப்படைத்து விட்டுச் சென்றான். மகனோ ஒரு நாளுக்கு ஒரு தங்க நாணயமாக பாம்பு புற்றிலிருந்து கொண்டு வந்து போடுவதால் புற்றை இடித்து அந்தப் பாம்பை அடித்துக் கொன்று விட்டு அதிலுள்ள எல்லா நாணயங்களையும் எடுத்துக் கொண்டு வருவது எனத் தீர்மானித்தான். அவன் புற்றை இடிக்கவே பாம்பு சீறிக் கொண்டு வெளியே வந்து அவனைத் தீண்டியது. புற்றில் நாணயமும் இருக்கவில்லை. பிராமணனின் மகனும் இறந்துவிட்டான். ஊர் திரும்பிய பிராம்மணன் மீண்டும் அந்தப் பாம்பிடம் போய் ''என் மகன் தெரியாமல் செய்து விட்டான். அதற்குத் தகுந்த தண்டனை அவனுக்குக் கிடைத்து விட்டது. நான் உன்னை முன் போல ஆராதித்து வருகிறேன். நீயும் எனக்கு தினமும் வழக்கம் போல ஒரு தங்க நாணயத்தைக் கொடுத்து அருள் புரி'' என்று வேண்டினான்.

பாம்போ ''உன் மனம் எப்போதும் என்னை ஒரு கொலையாளி எனவே எண்ணும். அதனால் மீண்டும் நம்மிடையே முன் போன்ற உறவு இருப்பதற்கு இல்லை'' எனக் கூறி எங்கோ போய் விட்டது.



# மூவாயிரம் வருட வரலாறு

**பெ**ய்ரூட்டில் இந்த சிலைகளின் மீது மூவாயிர ஆண்டுகால வரலாறு செதுக்கப்பட்டுள்ளது. எகிப்து, அசிரியா, கிரீஸ், ரோமாபுரி, பிரான்ஸ் ஆகிய பல நாடுகளின் படைகள் இவ்வழியாகச் சென்றன. அவற்றில் சிலர் இந்தப் பதுமைகளையும் சிலைகளையும் உருவாக்கினார்கள். இந்தப் படத்திலுள்ள சிற்பம் கி. மு. ஒன்பதாவது நூற்றாண்டில் ஒரு அசிரிய மன்னனால் உருவாக்கப்பட்டது.





# மர்மத் தடாகம்

## 23

[வேலனும் கோணங்கியும் நதிக்கரையில் மகரவர்மனையும் தேவசர்மனையும் கண்டனர். அப்போது அன்னரதம் ஒன்று நதியில் வந்து இறங்கியது. அதில் பயணம் செய்து காட்டில் விழுந்த தடாகத்தம்பிரானையும் தங்கபுர இளவரசியையும் எப்படிக் காப்பாற்றுவது என யோசித்துக் கொண்டிருக்கையில் ஓநாய்த்தலையர்கள் தாக்க வந்தார்கள். அப்போது— ]

ஓநாய்த் தலையர்கள் அன்ன ரதத்தைச் சூழ்ந்து கொள்ள முயல்வதைக் கண்டு வேலன் தான் கீழே போட்ட வாளை எடுத்துக் கொண்டு ''இந்த ஓநாய்த் தலையர்கள் மனிதப் பிறவியல்ல போலிருக்கிறதே. அரக்கர்களா?'' எனக் கேட்டான்.

மகரவர்மனே தன் ஈட்டியை எடுத்துக் கொண்டு ஆத்திரப்பட்டவனாக ஆற்றில் இறங்கினான். ஆனால் சட்டென நின்று வேலனிடம் ''ஐயா, இந்த ஓநாய்த் தலையர்கள் அந்த ரதத்தைக் கைப்பற்ற முயல்கிறார்கள். அவர்களை விரட்ட எங்களுக்கு உதவமாட்டீர்களா?'' என்று கேட்டான்.

வேலன் வெகு நிதானமாகத் தன் வாளை உறைக்குள் போட்டவாறே ''எங்கள் தங்கராச மன்ன



னின் புதல்வனையும் புதல்வியையும் உங்கள் தடாகத்தம்பிரான் கவர்ந்து சென்றவன். நான் அவர்களை விடுவித்துப் போக வந்தவன். எனவே உங்கள் தடாகத்தம்பிரான் ஆபத்தில் அகப்பட்டுக் கொண்டால் நான் விடுவிக்க வர மாட்டேன். அவன் நன்றாக அடியும் உதையும் பட்டு அவஸ்தைப் படட்டும்'' என்றான்.

அது கேட்டு மகரவர்மன் தேவசர்மனிடம் ''வைத்திய தேவரே, இப்படி கடும் பகைமை பாராட்டுகிறார். வேலன் என்று நான் எண்ணிக் கூடப் பார்க்கவில்லை. உங்களுக்கே தெரியுமே எங்கள் தடாகத்தம்பிரான் தங்கராசனின் மகனையும் மகளையும் எவ்வளவு பிரியமாக வளர்த்து வருகிறார். என்பது,'' என்றான்.

தேவசர்மனும் ''வேலா, இப்போது இவர்களோடு பகைமை வேண்டாம். இவர்களுக்கு உதவு'' என வேண்டினான். வேலனும் வாளை உருவிக் கொள்ள கோணங்கியும் தன் வாகனமான மனிதக் குரங்கின் மீது தாவி ஏறி உட்கார்ந்து கொண்டான். எல்லோருமாக மறு விநாடியே நதியை நோக்கிச் சென்று ஓநாய்த் தலையர்களைத் தாக்கலானார்கள்.

இதற்குள் தடாகத்தம்பிரானின் மெய்க்காவலாளி அந்த அன்ன ரதம் ஓநாய்த்தலையர்களிடம் அகப்படாமல் இருக்க அங்கும் இங்குமாக ஓட்டி போக்கு காட்டிக் கொண்டிருந்தான். நீர் யானை மீது மகரவர்மன் அமர்ந்து தன் ஈட்டியால் தாக்குதலை ஆரம்பித்தான். கோணங்கியும் மனிதக் குரங்கின் மீது உட்கார்ந்து கொண்டு ஓநாய்த்தலையர்களை அடித்து நொறுக்கினான்.

ஓட முயன்ற ஓநாய்த்தலையர்களை நீர் யானை தன் துதிக்கையால் சுற்றிப் பிடித்துத் தூக்கி எறிந்தது வேலனும் தன் வாளால் தன்னை எதிர்க்க வந்த ஓநாய்த்தலையர்களை வெட்டி வீழ்த்தினான். இப்படியாக சற்று நேரம்வரை அவர்

கள் ஓநாய்த்தலையர்களை அடித்து வீழ்த்தினார்கள். சிலர் இறந்து வீழ்ந்தார்கள். மற்றும் சிலர்படு காயமுற்று விழுந்து கிடந்தார்கள். வேறு சிலர் வெள்ளத்தில் திக்கு முக்காடி மூழ்கிப் போனார்கள்.

நீர் யானையும் மனிதக் குரங்கும் இந்த சண்டையில் தம் முழுப் பங்கையும் ஆற்றிக் கொண்டு தான் இருந்தன. எல்லோரும் ஓநாய்த் தலையர்களை அடித்து விரட்டிய போது வேலன் மட்டும் நதியில் நீந்தியவாறே அன்ன ரதத்தை அணுகி அதனுள் ஏறிச் சென்றான்.

அவன் தன் வாளை உருவி தடாகத் தம்பிரானின் மெய்க்காவலாளிக்கு நேரே நீட்டி ''அடே, இந்த ரதத்தைக் கரைக்கு ஓட்டிச் செல். வேறு ஏதாவது விஷமம் செய்ய முனைந்தால் முதலில் உன் தலை கீழே உருண்டு விழும். தெரியுமா?'' என மிரட்டினான்.

அதைக் கேட்ட மெய்க்காவலாளி ''ஓகோ! மகாசக்தி வாய்ந்த தடாகத்தம்பிரானின் மெய்க்காவலாளி நான். என்னை இதுவரை எந்தப் பயலும் மிரட்டியது இல்லை. தெரியுமா?'' என்றான் கோபத்தோடு.

அதற்கு வேலன் ''இப்போது நான் மிரட்டுகிறேன். உம் ஓட்டு இந்த ரதத்தை'' எனக் கூறியவாறே தன் வாளைக் கீழே வைத்து விட்டு தன் கையால் மெய்க்காவலாளியின் கழுத்தைப் பிடித்து நெருக்கினான்.





மெய்க்காவலாளி மூச்சு விடத் திணறினான். அவன் ''ஐயா, என்னை விட்டு விடுங்கள். நீங்கள் சொன்னபடியே செய்கிறேன். அடேயப்பா. என்ன பலம் உங்களுக்கு!!'' எனக் கூவினான். வேலனும் தன் பிடியைத் தளர்த்தியவாறே ''உம். இப்போதே இதனைக் கரைக்கு ஓட்டிப் போ'' என்றான். மறு நிமிடமே மெய்க்காவலாளியும் அதனைக் கரைக்கு ஓட்டிச் சென்றான்.

ரதம் கரையை அடைந்தது. அப்போது கோணங்கி ஒரு ஓநாய்த்தலையனைப் பிடித்து காதுகளை முறுக்கி இரண்டு குத்து விட்டு ''அடே! எங்கேயடா ஓடுகிறாய்?'' என மிரட்டினான். ரதம் கரை சேர வேலன் அதிலிருந்து இறங்கினான்.

அப்போது மகரவர்மன் தன் முகத்தைத் தொங்கப் போட்டவாறே ''வேலரே, நாங்கள் எங்கள் தலைவரான தடாகத்தம்பிரானைத் தேடிக் கண்டு பிடித்தாக வேண்டும். அதற்காக இந்த அன்னரதத்தில் ஏறிச் செல்கிறோம். அவர் எங்கே எப்படிப் பட்ட ஆபத்தில் அகப்பட்டுக் கொண்டிருக்கிறாரோ? என்ன பாடுபட்டுக் கொண்டிருக்கிறாரோ?'' என்று கூறினான்.

வேலனும் ''நீ உன் தம்பிரானைப் பற்றி கவலைப் படுவது போலவே நாங்களும் எங்கள் இளவரசியைப் பற்றி கவலை கொண்டிருக்கிறோம். நாங்களும் கிளம்புகிறோம். அவள் ஏதாவது மாபெரும் ஆபத்தில் அகப்பட்டுக் கொண்டிருந்தால் அதற்கு முழுப் பொறுப்பு உன் தம்பிரானே ஆவன். அப்போது நான் உன் தம்பிரானின் தலையைத் துண்டித்து எடுத்துப் போய் எங்கள் அரசர் முன் வைப்பேன். இது நினைவில் இருக்கட்டும்'' என்றான்.

அதுவரை ஏதோ பெருத்த யோசனையில் மூழ்கி இருந்த தேவசர்மா சட்டெனத் தன் தலையை நிமிர்த்தி ''வேலா. நான் முன்பே உன்னிடம் கூற வில்லையா இது

பகைமை பாராட்டும் வேளை அல்ல என்று. இப்போது அந்தத் தம்பிரானும் அரசகுமாரியும் உயிரோடு இருக்கிறார்களா என்று காட்டில் தேடிப் பார்க்கவேண்டியது தான் முதலாவது வேலையாகும்'' என்றான்.

வேலனும் ''ஆமாம், தடாகத் தம்பிரானைப் பற்றி நான் கவலைப் படா விட்டாலும் அவனோடு கூடவே ரதத்திலிருந்து காட்டிற் குள் விழுந்த தங்கபுர அரசிளங் குமாரியைப் பற்றி விவரம் தெரிந்து கொண்டாக வேண்டும். அதற்காகத் தானே நானும் கோணங்கியும் கிளம்பி வந்திருக் கிறோம்'' என்றான்.

அப்போது மெய்க்காவலாளி கீழே இறங்கி கோணங்கியிடம் ஏதோசொல்லப் போனான். அப் போது கோணங்கியின் வாகனமான மனிதக் குரங்கு ஒரு உறுமல் போடவே அவன் அதிர்ந்து போய் நின்றான். பிறகு அவன் சற்று தூரத் தில் நின்றவாறே கோணங்கியைப் பார்த்து ''ஐயா, எங்கள் தலை வரும் அரசகுமாரியும் காட்டில் எந்த இடத்தில் விழுந்தார்கள் என்பது எனக்குத் தெரியும். அது ஒரு மலைச் சாரல். அங்கு ஓங்கி உயர்ந்து வளர்ந்த மரங்கள் நிறைய உள்ளன. அங்கு ஓரிடத் தில் புல் பூண்டு கூட முளையாமல்



பொட்டலாக ஒரு சிறு பகுதி உள்ளது. அங்கிருந்து வெள்ளை நிறப் புகை கூட வந்து கொண்டி ருந்தது'' என்றான்.

அப்போது தேவசர்மன் ''ரொம்ப நல்லதாகப் போயிற்று. மெய்க்காவலாளிக்கு அவர்கள் விழுந்த இடம் நன்கு தெரிந்திருக் கிறது. இனிமேல் நாம் விரைவில் அங்கே போகவேண்டியதுதான். உம். ரதத்தில் ஏறி உட்காரலாம் வாருங்கள்'' என்றான்.

அது கேட்டு வேலன் ''சர்மா, இவ்வளவு பேரும் ரதத்தில் உட் கார முடியுமா? கோணங்கியின் மனிதக் குரங்கும் மகரவர்மனின் நீர் யானையும் உள்ளதே'' என்று



கூறினான். தேவசர்மனும் ''வாகனங்கள் உடையவர்கள் அவற்றின் மீதேறி வரட்டும். என்ன, நான் சொல்வது சரிதானே'' எனக் கூறி மகரவர்மனையும் கோணங்கியையும் பார்த்தான்.

கோணங்கியும் ''ஆகா. நான் வேகமாக வந்து சேர்ந்து விடுவேன். ஆனால் இந்த மகரவர்மன் தான் வழியில் ஏதாவது மக்கர் செய்வானோ என நினைக்க வேண்டி இருக்கிறது. அப்படி எதாவது அவன் செய்தால் என் மனிதக் குரங்கிற்கு அவனை பலியாகக் கொடுத்து விடுவேன்'' என்றான்.

அப்போது மகரவர்மன் ''கோணங்கியாரே. நாம் எல்லோரும் நண்பர்கள். ஒரே வேலையில் ஈடுபட்டிருக்கிறோம். ஆகையால் நான் எவ்விதத் தீங்கும் தங்களுக்கு இழைக்க மாட்டேன்'' என்றான்.

கோணங்கியோ ''இப்படி எல்லாம் பலர் கூறக் கேட்டுப் புளித்துப்போய் விட்டது. அரசகுமாரனும் அரச குமாரியும் எங்களுக்குக் கிடைக்கும் வரை நாங்கள் யாரையுமே நம்ப முடியாது. நம்பவும் மாட்டோம்'' என்றான்.

கோணங்கியையும் மகரவர்மனையும் தவிர மற்றவர்களெல்லாம் அன்னரதத்தில் ஏறிக் கொண்டார்கள். மெய்க் காவலாளி அந்த இருவரிடமும் அவர்கள் எங்கு வர வேண்டும் என்பதற்கான வழியைக் கூறினான். ''அதோ தெரிகிறதே பெரியமலை. மேகங்கள் கூட சூழ்ந்து இருக்கிறதே. அதுதான் இடம். அங்கு உயர்ந்த மரங்கள் பல உள்ளன'' என்று கூறி தூரத்திலுள்ள மலையைச் சுட்டிக் காட்டினான்.

பிறகு அன்னரதம் உயரக் கிளம்பி ஆகாய வழியே செல்லலாயிற்று. விமானம் கண்ணுக்குத் தோன்றாமல் மறைந்ததும் கோணங்கி தன் மனிதக் குரங்கின் மீது ஏறி உட்கார்ந்து கொண்டான். மகரவர்மனிடம் ''உம், நீ உன் நீர் யானை மீது ஏறி உட்கார்.

நாம் இனி கிளம்பலாம்'' என்ருன். மகரவர்மனும் தனது யானை மீது ஏறிக் கொண்டான். அப்போது கோணங்கியிடம் அகப்பட்டுக் கொண்ட ஓநாய்த் தலையன் ''ஐயா வீரரே, என்னையும் உங்களோடு அழைத்துச் செல்லுங்கள். இப்போது முதல் நான் உங்கள் அடிமை. நீங்கள் எந்த வேலையைச் செய்யச் சொன்னாலும் செய்வேன்'' என்ருன்.

கோணங்கியும் ''நீ சொல்வது சரியே. ஆனல் உன்னை நான் எப்படி கூடவே அழைத்துச் செல்ல முடியும்? உன்னைச் சுமக்க எவ்வித வாகனமும் இல்லையே. உன்னல் இந்த மனிதக் குரங்கு ஓடும் வேகத்தில் எங்களோடு வர முடியுமா?'' என்று கேட்டான். ஓநாய்த் தலையனும் ''ஓ! நான் வேகமாக வர முடியும். அது பற்றி நீங்கள் சற்றும் கவலைப் படாதீர்கள். உங்களோடு சேர்ந்தே வருவேன்'' என்ருன்.

கோணங்கியும் ''அப்படியானல் சரி. இதோ நாங்கள் கிளம்புகிருேம். நீயும் எங்களோடு வா'' எனக் கூறி தன் மனிதக் குரங்கை ஒரு தட்டு தட்டினன். அது வேகமாக ஓடலாயிற்று. அதே சமயம் குள்ளர் குல சேனதிபதியும் அவனது பல வீரர்களும் தம் ஆடுகளின் மீது ஏறிக் கொண்டு அங்கு வந்து சேர்ந்தார்கள்.

கோணங்கி அவர்களைப் பார்த்து ''ஓ! நீங்களெல்லாம் வேகமாக





# சக்தி உண்டா?

தன் முயற்சியில் சற்றும் மனம் தளராத விக்கிரமன் மீண்டும் மரத்தின் மீதேறி அங்கு தொங்கும் உடலைக் கீழே வீழ்த்தினுன். பின்னர் கீழே இறங்கி அதனைச் சுமந்து கொண்டு மயானத்தை நோக்கிச் செல்கையில் அதனுள் இருந்த வேதாளம் எள்ளி நகைத்து "மன்னனே. நீ அரிய சக்திகளை அடையவா முயல்கிருய்? அத்தகைய சக்திகள் ஏழை எளியவரிடம் கூட இருக்கலாம். ஒரு லட்சாதிபதியின் வாழ்க்கையே மாற்றிய ஒரு ஏழையின் கதையைக் கூறுகிறேன். கவனமாகக் கேள்'' என்று கூறி கதை சொல்லலாயிற்று.

ஒரு ஊரில் ஒரு பரம ஏழை இருந்தான். அவன் ஒரு கோவிலில் இருந்து அங்கு உடைக்கப்படும் தேங்காயையும் வாழைப்பழத்தையும் சாப்பிட்டு வாழ்ந்து வந்தான்.

## வேதாளம் சொல்லும் கதை

வந்திருக்கிறீர்களே. என்ன விஷயம்? என்று கேட்டான். அதற்கு குள்ளர் குலப் படைத் தலைவன் ஆற்றின் கரையோரமாக காயமடைந்து துடி துடித்தவாறே கிடங்கும் ஓநாய்த் தலையர்களைக் காட்டி ''இவர்களை எல்லாம் நீங்கள் அடித்து விரட்டியதை நாங்கள் மறைந்திருந்து பார்த்துக் கொண்டிருந்தோம். இவர்களை இப்படியே விட்டுப் போவது சரியல்ல. ஏதாவது ஒரு வழி செய்ய வேண்டாமா?'' எனக் கேட்டான்.

கோணங்கியும் ''இவர்களுக்கெல்லாம் செய்யக் கூடிய ஒரே வழி இவர்கள் எமலோகத்திற்கு போக ஏற்பாடு செய்வதே. ஏனென்றால் இவர்களுக்கு சிகிச்சை அளித்து குணப் படுத்தினால் இவர்கள் உங்களையே அடித்துக் கொன்று சாப்பிட்டு விடுவார்கள்'' என்றான். அப்போது குள்ளர்குலப் படைத் தலைவன் ''ஆ! அங்கே பாருங்கள். அடர்ந்த வெண்ணிறப் புகை ஆகாயம் முழுவதும் சூழ்ந்து வருகிறதே. காட்டில் தீப்பற்றிக் கொண்டு விட்டதா?'' எனக் கேட்டான் தன் கையால் அத்திசையில் காட்டியவாறே.

கோணங்கியும் ''காடு மட்டுமா எரியும்? அதில் அகப்பட்டுள்ள தடாகத் தம்பிரானும் வெந்து சாம்பலாவான். ஆனால்···அரசகுமாரி...ஆ!. அவளைக் காப்பாற்ற வேண்டுமே. ஓ. மனிதக் குரங்கு ஓடு! ஓடு!! சீக்கிரம் ஓடு'' என்றுதான் ஏறி உட்கார்ந்திருந்த மனிதக் குரங்கை விரட்டலானான்.

மனிதக் குரங்கும் பலத்த கூச்சல் போட்டவாறே வேகமாக ஓடியது. அதன் பின்னால் ஓநாய்த் தலையனும் நீர் யானை மீதுள்ள மகரவர்மனும் வேக வேகமாகச் சென்றார்கள். காட்டில் பிடித்த தீ எவ்வளவு நஷ்டத்தை ஏற்படுத்தி விடுமோ என்ற பயம் எல்லோரையுமே பிடித்துக் கொண்டது.





அவன் யாரிடமும் எதையும் கொடுக்கும்படி கேட்டதில்லை. அவை அவனுக்குத் தாமாகவே கிடைத்து வந்தன. அவனும் கிடைத்ததைக் கொண்டு திருப்தி அடைந்து வந்தான். அதிகம் வேண்டும் என்று ஆசைப்பட வில்லை.

ஒரு நாள் ஒரு லட்சாதிபதி அந்தக் கோவிலுக்கு வந்தான். அவன் தேங்காய் பழம் உடைத்து ''சுவாமி குழந்தையே இல்லாத எனக்கு ஒரு குழந்தை பிறக்க அருள் புரி'' என்று வேண்டினான். பிறகு அவன் ஒரு வாழைப் பழத்தை எடுத்து எதிரே இருந்த ஏழையிடம் கொடுத்தான்.

ஏழையும் அதைக் கையில் வாங்கியபின் ஒரு விநாடி யோசித்து விட்டு அதனை லட்சாதிபதியிடமே கொடுத்து ''ஐயா. இதனை உங்கள் மனைவியிடம் கொடுங்கள். அவள் சாப்பிட்டால் அடுத்த வருடமே அவள் ஒரு குழந்தையைப் பெற்று எடுப்பாள்'' எனக் கூறினான்.

லட்சாதிபதியும் தனக்கு எப்படியாவது ஒரு குழந்தை பிறந்தால் போதும் என எண்ணி அந்த ஏழை கொடுத்த வாழைப்பழத்தை வாங்கித் தன் மனைவியிடம் கொடுத்து சாப்பிடச் சொன்னான். அவளும் அதைச் சாப்பிட்டாள். அடுத்த வருடமே அவள் ஒரு குழந்தையைப் பெற்றெடுத்தாள்.

கோவிலில் கண்ட ஏழை சக்தி வாய்ந்தவன் என எண்ணிய லட்சாதிபதி அவனைப் பார்க்கப் போனான். ஏழையும் அவனிடம் ''குழந்தை பிறந்து விட்டதா?'' என விசாரித்தான். லட்சாதிபதியும் ''நீங்கள் அனுக்கிரகித்த வாழைப்பழத்தால் எனக்கு புத்திர பாக்கியம் கிடைத்து விட்டது. நீங்கள் எதைக் கேட்டாலும் நான் கொடுக்கிறேன்'' என்றான்.

ஏழையும் ''எனக்கு எதுவும் வேண்டாம். நீ அக்கிரமமான வழியில் பணம் சேர்க்காமல் இரு. கொள்ளை லாபம் அடிக்காதே.

பொய்க் கணக்கு எழுதாதே. பத்திரங்களைத் திருத்தாதே. அநியாய வட்டி வாங்காதே. கள்ளச் சந்தையை ஊக்குவிக்காதே. அப்போது தான் உன் மகன் நெடுங் காலம் உயிர் வாழ்வான். இவ்வாறு இல்லா விட்டால் அவனுக்கு ஆபத்தே'' என்றான்.

அது கேட்டு லட்சாதிபதி திடுக்கிட்டான். ஏனெனில் அவன் சம்பாதித்ததெல்லாம் அநியாய வழியிலேயே. ஆனால் அப்போது முதல் நல்லவனாகி நியாய வட்டி வாங்கி நேர்மையாக வியாபாரம் செய்து நல்ல பெயர் பெற்றான்.

வேதாளம் இக்கதையைக் கூறி ''ஏழையிடம் அப்படி என்ன உயரிய சக்தி இருந்தது? அது அவனுக்கு எப்படி கிடைத்தது? இதற்கு சரியான பதில் தெரிந்திருந்தும் நீ கூறா விட்டால் உன் தலை வெடித்து சுக்கு நூறாகி விடும்'' என்று கூறியது. விக்கிரமனும் ''மக்கள் எளிய வாழ்க்கை நடத்தும் பலரை சக்திமான்களென மதித்து அவர்களது பேச்சைக் கேட்கிறார்கள். அவர்கள் சொல்வது பலித்து விட்டால் கேட்கவே வேண்டாம். லட்சாதிபதிக்கும் இது போல நடந்தது. பரிசுத்த மனதோடு எளிய வாழ்க்கை நடத்திய ஏழை முதலில் கூறியது பலித்து விட்டது கண்டு மறுமுறையும் அவன் கூறியபடி நடக்கலானான். சில சமயங்களில் இவ்வாறு நடப்பதாலேயே உலகில் மக்கள் இந்த மாதிரி சாது சன்னியாசிகள் கூறுவதை நம்புகிறார்கள். எனவே ஏழை பிறருக்கு நல்லதையே விரும்பினான் என்பதே அவனது விசேஷ சக்தி'' என்றான்.

விக்கிரமனின் சரியான இந்த பதிலால் அவனது மௌனம் கலையவே அவன் சுமந்து வந்த உடலோடு வேதாளம் உயரக் கிளம்பி மீண்டும் முருங்க மரத்தில் ஏறிக் கொண்டது.



# படிந்த கறை போகுமா?

**கி**ட்டு குறும்புக்காரன். ஊரார் அவனைப் பற்றி அவனது தந்தையிடம் புகார் செய்யும் போதெல்லாம் அவனது தந்தை தன் வீட்டுக் கதவில் ஒரு ஆணியை அடித்து வந்தார். கொஞ்ச நாட்களில் அக்கதவு பூராவும் ஆணிகளால் நிரம்பி விட்டது.

திடீரென கிட்டுவிடம் மாறுதல் ஏற்பட்டது. அவன் விஷமம் செய்வதை நிறுத்தி எல்லோருக்கும் உதவி புரியலானான். அவன் செய்யும் ஒவ்வொரு உதவியைப் பற்றி பிறர் கூற அவன் தந்தை கேட்டதும் தன் வீட்டுக் கதவில் அடித்த ஆணிகளை ஒவ்வொன்றாகப் பிடுங்கி வரலானார். கொஞ்ச நாட்களில் கதவிலிருந்த ஆணிகளெல்லாம் பிடுங்கப்பட்டு விட்டன.

ஆனால் கதவில் ஆணிகள் அடிக்கப்பட்ட இடங்களில் இருந்த ஓட்டைகளைப் பார்த்து கிட்டு தன் தந்தையிடம் ''அப்படி ஆணிகளை எடுத்து விட்டாலும் அவை அடிக்கப் பட்ட இடங்களில் பள்ளங்கள் அப்படி இருக்கின்றனவே'' என்றான். தந்தையும் ''நாம் கெட்ட செயல்களைப் புரிந்தால் கறை படிந்து அவற்றின் நினைவு இருந்து மனதை உறுத்திக் கொண்டே இருக்கும். அது போலத்தான் இது'' என்றார்.





# வைத்தியம் பாதிதான்!

மனோகரன் என்பவன் மாபெரும் பணக்காரன். ஆனால் அவனுக்கு உடல் நலம் மட்டும் குன்றியே இருந்தது. என்ன மருந்து சாப்பிட்டாலும் குணமடையவில்லை. அதனால் அவன் தன் உடல் நிலை குறித்துக் கவலைப் பட்டுக் கொண்டிருந்தான்.

அப்போது அவனது நண்பனான வைத்தியநாதன் தன் ஊரிலிருந்து மனோகரனைக் காண வந்தான். அவன் ''மனோகரா, எப்படி இருக்கிறாய்? சௌக்கியந்தானே'' என்று கேட்டான். மனோகரனும் ''வைத்தி, எனக்கு உடம்பே சரியில்லை. நீதான் வைத்தியன் ஆயிற்றே. நீயாவது ஏதாவது மருந்து கொடுத்து குணப்படுத்து பார்க்கலாம்'' என்றான்.

வைத்தியும் ''சரி. நீ தினமும் என்னென்ன செய்கிறாய் சொல்'' என்று கேட்டான். மனோகரனும் ''தினமும் எழுந்து காலைக் கடன்களை முடித்து பல் துலக்கி குளித்து விட்டு ஏதாவது சிற்றுண்டி சாப்பிடுவேன். பிறகு கணக்கு வழக்குகளைக் கவனிப்பேன். இடையில் ஓரிருமுறை ஏதாவது பழரசம் அருந்துவேன். உச்சி வேலைக்கு சாப்பிடுவேன். பிறகு இளைப்பாறச் சற்று படுப்பேன். ஒரு தூக்கம் போட்டு எழுந்து நில விவகாரங்களை என் தந்தையுடன் விவாதிப்பேன். பிறகு மாலைச் சிற்றுண்டி. அதன் பிறகு ஊர் விவகாரம் பற்றி தெரிந்து கொள்வேன். பிறகு இரவில் சாப்பாடு. அதற்குப் பிறகு படுக்குமுன் பழங்களும் பாலும் சாப்பிடுவேன். இதுதான் தினமும் நான் செய்வது'' என்று கூறினான்.

சாரதா சுவாமிநாதன்



அதைக் கேட்ட வைத்தி ''உன் உடல் நிலை மாறி மனக்கவலை தீர மருந்து சாப்பிடுவதோடு இட மாற்றமும் அவசியம். ஒரு மாத காலம் என் ஊரில் வந்து தங்கு. உன் உடம்பு சரியாகி விடும்'' என்ருன்.

மனோகரனும் தன் தந்தையின் அனுமதி பெற்று மறுநாளே வைத்தி இருந்த ஊருக்குச் சென்ருன். அந்த ஊரில் எல்லோரும் நல்ல பண வசதியுடன் வாழ்ந்து வந்தார்கள். எனவே மாலை வேளைகளில் மனதை மகிழ்விக்க ஏதாவது ஒரு கலை நிகழ்ச்சி நடந்து கொண்டே இருக்கும். மனோகரன் தினமும் அந்நிகழ்ச்சிகளைக் காணச் சென்ருன். அவன் மனம் அதனுல் மகிழலாயிற்று. தினமும் அவன் எப்போது மாலை ஆகும் என்று எதிர்பார்த்துக் காத்திருக்கலானுன்.

அதுகண்டு வைத்தியும் ''இந்த ஊர்க் காற்று உனக்கு பிடித்துப் போய் விட்டது போலிருக்கிறது. நேற்று நான் ஒரு சாதுவைக் கண்டேன். அவர் ஒரு வேரைப் பற்றிக் கூறி அதைப் பறித்து சாப்பிடும் நோயாளி விரைவிலேயே குணம் அடைவான், அவனது எந்த நோயும் பறந்து போகும் என்று கூறினுர். வேரை நோயாளியே தன் கைப்பட்டப் பறித்து எடுக்க வேண்டுமாம். அது இவ்வூருக்கு அருகே அதோ தெரியும் மலையின் நடுவே காட்டில் உள்ளது. நாளை நீயும் நானுமாகப் போகலாம். நீ அந்த வேரைப் பறித்து சாப்பிடு. அது மிகவும் நல்ல மருந்துதான்'' என்ருன்.

மறுநாள் மனோகரனும் வைத்தியும் மலையை நோக்கிச் சென்ருர்கள். வைத்தி முன்னே செல்ல மனோகரன் அவன் பின்னுல் சென்ருன். வேகவேகமாகச் செல்லும் வைத்தியை மனோகரனுல் பின் தொடர்ந்து செல்ல முடியவில்லை. அப்போது வைத்தி ''மனோகரா! இதற்குள் களைத்துப் போய் விட்டாயா? என் வயதுதானே

உனக்கு, என்னைப் போல நடக்க வேண்டாமா?'' என்றான். மனோகரனும் வேகமாக நடந்தவாறே ''வேரைப் பிடுங்கிக் கொண்டு சாயந்திரம் ஆவதற்குள் ஊர் திரும்பி விடலாமல்லவா? இன்று அருமையான நாட்டிய நிகழ்ச்சி ஒன்று இருக்கிறது'' என்றான்.

வைத்தியும் ''இன்னும் கொஞ்ச தூரந்தான். அங்குதான் அந்த வேர் இருக்கிறது'' என்றான். சற்று தூரம் போனதும் அவன் போனதும் அவன் ஒரு மூலிகைச் செடியைக் காட்டவே மனோகரனும் அதைப் பிடுங்கினான். வேரோடு வந்த அந்தச் செடியை நன்கு அலம்பி விட்டு வைத்தி அதன் வேர்ப் பகுதியை நறுக்கி மனோகரனிடம் கொடுத்து நன்கு மென்று சாப்பிடச் சொன்னான்.

அதன் பிறகு இருவரும் ஊர் திரும்பலானார்கள். மனோகரனுக்கோ நல்ல பசி. அவன் தன் நண்பன் வைத்தியிடம் ''வைத்தி, எதாவது சாப்பிட்டால்தான் என்னால் இனி அடி எடுத்து வைக்க முடியும்'' என்றான். வைத்தியும் ''இங்குள்ள மலைவாசிகளை நான் அறிவேன். அவர்களின் தலைவனின் வீட்டிற்குப் போகலாம்'' எனக் கூறி அவனை ஒரு மலைவாசியின் வீட்டிற்கு அழைத்துச் சென்றான்.

மலைவாசியும் அவர்களை வரவேற்று உபசரித்தான். வைத்தியும் அவனிடம் ''சாப்பிட ஏதா



வது இருக்கிறதா?'' எனக் கேட்கவே அவனும் ஒரு தட்டில் சோளச் சோறு கொண்டு வந்து கொடுத்தான். மனோகரன் அதைச் சாப்பிட்டான். வெகு ருசியாக அவனுக்கு அது அப்போது இருந்தது. தான் சாப்பிட்டது என்ன என்பது கூட அவனுக்குத் தெரியவில்லை.

சாப்பிட்ட பின் அலுப்புத் தீர அவன் சற்று படுத்தான். நல்ல தூக்கம். ஒரு மணி நேரம் கழித்து வைத்தியும் மனோகரனும் எழுந்து ஊருக்கு வந்தார்கள். வழியில் மனோகரன் ''அந்த வேர் நல்ல மருந்துதான். எனக்கு நல்ல பசியைக் கிளப்பி விட்டு உடம்பிலேயே ஒரு புதிய உணர்ச்சியை ஏற்படுத்தியுள்ளது'' என்றான்.

அன்றிரவும் மனோகரன் நன்கு சாப்பிட்டு விட்டு படுத்து நன்கு தூங்கினான். மறுநாள் அவன் தன் உடலிலிருந்து பெரிய சுமையே இறங்கியது போல உணர்ந்தான். அதனை அவன் வைத்தியிடம் கூறினான்.

வைத்தியும் சிரித்தவாறே ''உன் உடல் நன்கு தேறி விட்டது. நீ பசி எடுத்த பின் சாப்பிட வேண்டும். நன்கு தூங்க வேண்டும். நல்ல தூக்கம் வர நன்கு உழைத்து வேலை செய்ய வேண்டும். மனம் மகிழ அவ்வப்போது கலை நிகழ்ச்சிகளைக் கண்டு களிக்க வேண்டும். இவற்றையே நான் செய்தேன். எனவே இனிமேல் பசி எடுத்த பின்பே சாப்பிடு. நன்கு வேலை செய்'' என்றான்.

மனோகரனும் வைத்தி தனக்கு உணர்த்தியதை நன்கு புரிந்து கொண்டு ஊர் திரும்பினான். தன் ஊரிலும் கலை நிகழ்ச்சிகளுக்கு அவன் ஏற்பாடு செய்ததோடு அவன் உடல் வளைய உழைத்து நன்கு பசித்த பின்னரே புசித்து உடல் நலத்தைப் பேணி வரலானான். அவனுக்கு எந்த நோயும் வரவில்லை.





# அதிர்ஷ்டமும் வேண்டும்!

பரமனுக்கு கப்பல் போன்ற வீடும் ஏகப்பட்ட நிலபுலன்களும் இருந்தன. அவனது ஒரே மகன் பாலன். ஒரு முறை தந்தையும் மகனும் தலை நகரில் நடக்கும் ஒரு திருவிழாவைக் காணச் சென்றார்கள். இரண்டு நாட்கள் நகரில் இருந்து விட்டு மூன்றாவது நாள் நகரில் ஒரு பகுதிக்குப் போனபோது மிகப் பெரிய மாளிகை ஒன்றை அவர்கள் கண்டார்கள்.

பரமனும் ''இது மாணிக்கத்தின் மாளிகை. நான் சிறுவனாக இருக்கும் போது மாணிக்கம் என்ற நண்பன் இருந்தான். இருவருமே ஏழைக் குடும்பத்தில் பிறந்தவர்கள். ஏதோ கிடைத்த வேலையைச் செய்து கூலி பெறுவோம். நாங்கள் இருந்த ஊரின் எல்லையில் ஒரு பாழடைந்த மாளிகை இருந்தது. அது ஒரு காலத்தில் ஒரு ஜமீன்தாரருடையதாக இருந்ததாம். இடி விழுந்து பாழடைந்து போயிற்றாம். ஜமீன்தாரரின் குடும்பம் முழுவதுமே இடிந்த கட்டடத்தில் அகப்பட்டு இறந்து போனார்கள். ஆனால் ஜமீன்தாரரின் கிழத்தந்தை மட்டும் உயிர் தப்பினார். குடும்பமே அழிந்தது கண்டு பைத்தியம் பிடித்தவர் போலாகி விட்டார்'' என்று கூறி மேலும் சொன்னான்.

அந்தக் கிழவர் ஊருக்குள் வரும் போதெல்லாம் எங்களைப் போன்ற சிறுவர்களிடம் ''தங்கம் வேணுமா?'' என உரத்த குரலில் கேட்பார். எல்லோரும் அவரைப் பார்த்து பைத்தியம் என்று அலறி அடித்து கொண்டு ஓடி விடுவார்கள். நானும் மாணிக்கமும் மட்டும் அவரிடம் போய் நின்று பேசி வருவோம். சில சமயம் அவர்

இராஜ. பார்த்தசாரதி

இருக்கும் பாழடைந்த மாளிகைக்கும் போவோம். ஒரு நாள் நாங்கள் அந்த மாளிகைக்குப் போனபோது கிழவர் இறக்கும் தருணத்தில் இருந்தார். அது கண்டு அவருக்கு நாங்கள் இருவரும் பணிவிடை புரிந்து நன்கு படுக்க வைத்தோம்.

அவரும் ''இனி நான் பிழைக்க மாட்டேன். அதோ தெரியும் வேப்பமரத்தடியே புதையல் இருக்கிறது. நீங்கள் இரண்டு பேருமாக எடுத்துக் கொள்ளுங்கள்'' என்று கூறி சற்று நேரத்தில் இறந்தும் விட்டார்.

நானும் மாணிக்கமும் சில நாட்களான பிறகு அந்த வேப்பமரத்தடியில் வெட்ட எங்களுக்கு பழங்காலப்பானை ஒன்று அகப்பட்டது. அது நிறையத் தங்கநாணயங்களாக இருந்தன. அதனை எடுத்து நாங்கள் இருவரும் சமமாகப் பங்கிட்டுக் கொண்டோம். மாணிக்கம் தலை நகருக்குப் போய் விட்டான். நானும் இப்போது இருக்கும் ஊருக்கு வந்து நிலபுலன்கள் வாங்கி வீடு கட்டிக் கொண்டேன். நான் விவசாயத்தில் இறங்கி விடடேன். மாணிக்கமோ வியாபாரத்தில் இறங்கி அமோக லாபம் சம்பாதித்து விட்டான்.

இவ்வாறு கூறி பரமன் தன் மகன் பாலனை அந்த மாளிகைக்குள் அழைத்துப் போனான். அவர்கள் வருவதை முன்பே பார்த்து விட்ட அந்த மாளிகையின் சொந்



தக்காரன் மாணிக்கமும் ஓடோடி வந்து ''பரமனு! வா! வா!! அடேயப்பா. பார்த்து எவ்வளவு வருடங்களாகி விட்டன'' என்று சந்தோஷத்தோடு வரவேற்ருன்.

பாலன் அந்த மாளிகையையும் அதிலுள்ளவர்களேயும் ஆடம்பரப் பொருள்களேயும் பணியாட்களே யும் பார்த்து விட்டு பிரமித்துப் போனுன். அவன் தன் தந்தை பரமனிடம் ''அப்பா, நீங்களும் உங்கள் நண்பர் மாதிரி சம்பாதித் திருந்தால் நான் எவ்வளவு சுக மாக இருந்திருப்பேன். உங்கள் இருவருக்கும் ஒரே அளவில் பணம் கிடைக்க நீங்கள் மட்டும் விவ சாயம் என்று ஒரு கிராமத்தில் போய் உட்கார்ந்து விட்டீர்களே'' என்று கூறி தன் மனத்தாங்கலேத் தெரியப்படுத்தினுன்.

மாணிக்கம் அதைக் கேட்டு சிரித்துக் கொண்டான். பரமனே யுப் பாலனேயும் குளித்து சாப் பிடச் சொன்னுன். பாலன் சரி யாகச் சாப்பிடக் கூட இல்லே.

சாப்பாடு முடிந்து மூவரும் உட் கார்ந்து இளேப்பாறிக் கொண்டி ருந்தார்கள். அப்போது பாலன் ''அப்பா, நீங்களும் உங்கள் நண் பரைப் போல பணம் சம்பாதித் திருந்திருக்கலாம்'' என்ருன்.

அப்போது மாணிக்கம் ''தம்பி உன் தந்தை தேர்ந்து எடுத்த தொழிலே சிறந்தது. நான் செய் யும் வியாபாரத்தில் திடீரென லாபம் வரும். சடாலென நஷ்ட



மும் வரும். சில சமயத்தில் எல்லாமே போய் விடும். உன்னைப் போலத்தான் என் அண்ணனும் நினைத்தான். அவனுக்கும் நான் என் பணத்தில் பாதியைக் கொடுத்தேன். என்னோடு கூட்டாக வியாபாரம் செய்ய வேண்டினேன். கேட்காமல் தனியாக வியாபாரம் செய்தான். அவன் சரக்கு ஏற்றி அனுப்பிய கப்பல் நடுக்கடலில் மூழ்கிப் போய் விட்டது. மறுபடியும் என்னிடம் கொஞ்சம் பணம் வாங்கி மரக் கடை வைத்தான். அதுவோ ஒரு நாள் தீப்பிடித்து எரிந்து போயிற்று. இப்படியாக அவன் செய்த வியாபாரத்தில் எல்லாம் நஷ்டம் ஏற்பட்டது. நானோ எதைச் செய்தாலும் பத்து மடங்கு பனிரெண்டு மடங்கு என்று லாபமே கிடைக்கலாயிற்று. வியாபாரத்தில் ஓடியாடுவது மட்டும் போதாது. அதிர்ஷ்டமும் இருக்க வேண்டும். ஏதோ என் நல்ல காலம் எனக்கு லாபம் கிடைத்தது. நானும் என் அண்ணனைப் போலாகி இருந்தால் என் கதி என்ன? அப்போது நீ என்ன சொல்வாய்? உன் தந்தை வாங்கிப் போட்ட நிலபுலன்களே மேல் என்று தானே நினைப்பாய்'' என்றான். பாலனும் ''ஓ! இப்படியா! இப்போது தான் எனக்கு விளங்கியது'' என்றான். அதற்குப் பிறகு பாலன் உற்சாகத்துடன் மாளிகையைச் சுற்றிப் பார்க்கச் சென்றான். அவன் போனதும் பரமன் "மாணிக்கம், உனக்கு ஒரு அண்ணன் இருந்ததாக என்னிடம் சொல்லவே இல்லையே'' என்றான். மாணிக்கமும் ''ஆமாம். சொல்லவில்லைதான். ஏனென்றால் அவன் என் கற்பனையில் தோன்றியவனே. உன் மகனின் மனதை மாற்ற நானே புனைந்த கதைதான் இப்போது சொன்னது'' என்றான்.

பரமனும் ''ஆகா'' எனக் கூறி நண்பனுக்கு நன்றி தெரிவித்தான்.





# யார் பரீட்சித்தது?

தேவபுரியை ஆண்ட தானவர்மன் நாட்டில் திருடர் பயமே இல்லாமல் செய்து நன்கு ஆண்டு வந்தான். தானவர்மனின் மகன் குணவர்மன். தானவர்மன் தனக்கு வயது அதிகமாகி விட்டதால் தன் மகனை குணவர்மனுக்கு அரசுப் பட்டம் கட்டினான்.

இந்தப் பட்டாபிஷேகம் நடப்பதற்கு முன்தினம் குணவர்மன் ஒரு விஷயத்தைப் பற்றி யோசித்து ஆச்சரியப்படலானான். ஏன் தன் நாட்டில் ஒரு சிறு திருட்டு கூட நடைபெறுவதில்லை என்பதே அது. இதற்கு எப்படி தன் தந்தை தக்க நடவடிக்கைகளை எடுத்தார் என்பதை அறிய அவன் விரும்பினான்.

இதற்காக தானே ஒரு திருட்டைச் செய்து பார்ப்பது எனத் தீர்மானித்து அவன் அன்றிரவே மாறு வேடம் போட்டுக் கொண்டு நகரில் ஒரு பணக்காரனின் வீட்டில் நுழைந்து கொஞ்சம் பொருளைத் திருடி எடுத்துக் கொண்டு அவ் வீட்டை விட்டு வெளியே வந்தான்.

அவன் சற்று தூரம் போனதும் யாரோ ஒருவன் அவனது தோளை பலமாகப் பிடித்து நிறுத்தினான். பின்னால் அவன் திரும்பிப் பார்த்த போது இன்னொரு திருடன் ''உஷ். பாராக்காரர்கள் இருக்கிறார்கள். மூச்சு விடாதே. நானும் உன் போல ஒரு திருடனே'' என்றான்.

இதைக் கேட்டதும் குணவர்மனின் மனம் மகிழ்ந்தது. தன்னிடம் ஒரு திருடன் அகப்பட்டு விட்டதால் அவனைப் பிடித்துப் போய் தன் தந்தையிடம் காட்டி "இதோ பார்த்தீர்களா திருடனை! திருட்டு பயமே நம் நாட்டில் இல்லை என்றீர்களே. இப்போது என்ன

பாபநாசம் சாமா

யுடன் இருக்க வேண்டும்'' எனக் கூறினன்.

குணவர்மனும் தினமும் இனி தான் இரவு வேளைகளில் நகர சோதனைக்குப் போவதாகக் கூறி அவ்விதமே அன்றிரவே செய்தான். கொஞ்ச தூரம் அவன் போனதுமே திருடர் கூட்டம் ஒன்று அவனைச் சூழ்ந்து கொண்டது. உடனே குணவர்மன் தன் வாளை உருவிக் கொண்டு அவர்களை எதிர்த்துச் சண்டையிட்டான். தன் ஆட்சியின் முதல் நாளன்றே இவ்வளவு திருடர்களை காண வேண்டி வந்ததா என எண்ணி அவன் ஆச்சரியப் படலானன்.

இதே சமயம் யாரோ ஒருவன் குதிரை மீது அமர்ந்து வந்து அந்தத் திருடர்களைத் தாக்கி விரட்டினன். ஓடும் திருடர்களைப் பிடிக்க குணவர்மன் முயன்ற போது அவனுக்கு உதவிய குதிரை வீரன் ''அரசே, அவர்கள் இனி உங்களுக்கு அகப்பட மாட்டார்கள். இந்த நாட்டில் இனி அடி எடுத்துக் கூட வைக்க மாட்டார்கள்'' என்முன்.

அப்போது குணவர்மன் அவனை பார்த்து ''நீ யாரப்பா? நீ இந்த நாட்டைச் சேர்ந்தவனு அல்லது வேறு நாட்டிலிருந்து வந்தவனு? தக்க சமயத்தில் நீ வந்து உதவி புரிந்தாய்'' என்முன்.



அவனும் ''நான் அண்டை நாட்டைச் சேர்ந்தவன். என் நாட்டில் வாழவழியில்லாமல் நானும் என் மகனும் சில மாதங்களுக்கு முன் இங்கு வந்தோம். நேற்றிலிருந்து என் மகனைக் காணவில்லை. நான் அவனைத் தேடி வரும் போதுதான் திருடர்கள் உங்களைச் சூழ்ந்து நிற்பதைக் கண்டேன். நேற்று உங்களை மகுடாபிஷேகத்தின் போது பார்த்தபடியால் அடையாளம் கண்டு கொண்டேன்'' என்முன்.

தன் நாட்டவன் அல்லாது போயினும் தனக்கு உதவிய அந்த வீரனுக்கு எப்படியாவது உதவ குணவர்மன் எண்ணி தன் விரலிலிருந்த ஒரு மோதிரத்தை எடுத்து



அவனிடம் கொடுத்து "நாளை இதை நீ எடுத்து வந்து தர்பாரில் என்னைப் பார். நீ கேட்டதை நான் கொடுக்கிறேன்" என்றான்.

மறு நாள் தர்பாரில் ஒரே கூட்டம். எல்லோரும் வந்த போதிலும் இன்னும் தன் தந்தை வராததை குணவர்மன் கவனித்தான். இதே சமயம் அந்த அயல் நாட்டு வீரன் வந்து அரசன் முன் நின்று அவனது மோதிரத்தைக் காட்டினான். அப்போது குணவர்மன் "உனக்கு என்ன வேண்டும், கேள்" என்றான்.

அதற்கு அந்த வீரனும் "அரசே, முந்தாநாளிரவு என் மகன் திருடப் போய் உங்கள் தந்தையிடம் அகப்பட்டுக் கொண்டு இப்போது சிறைச் சாலையில் இருக்கிறான். அவனை விடுதலை செய்யுங்கள் என் ஒரே மகனான அவனை அழைத்துக் கொண்டு என் நாட்டிற்கே போய் விடுகிறேன்" என்றான்.

குணவர்மன் அது கேட்டு ஒரு கணம் திகைத்துப் போனான் "முந்தாநாள் இரவு திருடியது நானே. வேறு யாரும் திருடன் என அகப்படவில்லை. இவனோ திருடனாக அகப்பட்டவன் தன் மகனே என்று கூறுகிறான். இதைத் தீர்க்க இப்போது என் தந்தையும் இங்கே இல்லையே" என எண்ணினான்.

பிறகு அவன் சட்டெனத் தன் சிம்மாசனத்திலிருந்து எழுந்து தன் மாளிகைக்குள் சென்றான். சபையோர் என்ன நடக்கப் போகிறது என்று ஆவலுடன் பார்த்துக் கொண்டிருந்தார்கள். அப்போது அயல் நாட்டு வீரனாக வந்தவன் தன் வேடத்தைக் கலைத்து விட்டு நின்றான்! அவன் வேறு யாருமல்ல குணவர்மனின் தந்தையான தானவர்மனே.

இதைக் கண்டு சபையோர் பெருத்த ஆரவாரம் செய்து அவனை அரியாசனத்தில் அமர்ந்து கொள்ளும்படி வேண்டினார்கள். அப்போது அவனும் தன் மகனைப் பரீட்சிக்கவே தான் அவ்வாறு வேடம் போட்டதாகக் கூறி விட்டு

சிம்மாசனத்தில் அமர்ந்தான். இதற்குள் குணவர்மன் தான் முன்பு போட்டுக் கொண்ட திருடன் வேஷத்தில் சபைக்கு வந்து ''அப்பா, நீங்கள் எங்கே இருக்கிறீர்கள். வாருங்கள் போகலாம். அரசர் நீங்கள் வேண்டியதன் பேரில் என்னை மன்னித்து விடுதலை செய்து விட்டார்'' என்று உரத்த குரலில் கூவினுன்.

சிம்மாசனத்தில் அமர்ந்திருந்த தானவர்மன் அந்தத் திருடனைப் பார்த்து ''உன்னை இப்போது விடுதலை செய்த அரசன் எங்கே?'' என்று கேட்டான்.

அந்தக் குரலிலிருந்து அயல் நாட்டு வீரனுக வந்தது தன் தந்தையே எனத் தெரிந்து கொண்ட குணவர்மன் தன் வேஷத்தைக் கலைத்தவாறே ''திருடனைச் சிறையிலிருந்து விடுதலை செய்த அரசன் நானே'' என்ருன்.

தானவர்மன் குணவர்மனைக் கட்டித் தழுவியவாறே நின்ருன்.

அப்போது குணவர்மன் ''உங்களது ஆட்சியின் திறமையைப் பரீட்சித்துப் பார்க்கவே நான் திருடன் வேடத்தில் போனேன்'' என்ருன்.

தானவர்மனும் ''உன் கூரிய அறிவைக் கண்டு நான் மகிழ்ச்சி அடைகிறேன். உன் தைரியத்தையும் துணிச்சலையும் காண நானே சிலரைத் திருடர்கள் போல உன்னைச் சூழ்ந்து கொள்ள அனுப்பினேன். திருடனைப் பற்றி நீ என்ன செய்யப் போகிருய் என்பதைக் காணவே நான் அயல் நாட்டு வீரனுக வந்தேன். உன்னிடம் நான் கோரிக்கை விடுத்தேன். ஆனுல் நீ தான் அந்தத் திருடனுக வந்தது என்பது இப்போது தான் தெரிந்தது'' என்ருன்.

சபையோர் உடனே ''அப்பாவுக்குச் சற்றும் சளைக்காமல் இருக்கிருன் மகனும்'' என்று தானவர்மனையும் குணவர்மனையும் கூறிப் பாராட்டினுர்கள்.



பதில் சொல்லி அனுப்புவது?'' என்று கேட்க ராஜ்மோகனும் "இன்னும் கொஞ்ச நாட்களுக்குள் பதில் சொல்வதாகக் கூறி அனுப்புங்கள். அதற்குள் இந்தப் பிரச்னேக்கு வழி காணலாம்'' என்முன்.

ராஜ்மோகனின் ஆருயிர் தோழன் ஆஸ்தான இந்திரஜால வித்தைத்காரன் ஆத்மராமன். அவனிடம் தன் முன் உள்ள பிரச்னேயை ராஜ்மோகன் கூறிஞன். அவனும் சற்று யோசித்துவிட்டு ''நீயும் ரமாதேவியை விரும்புவதாகத் தெரிகிறது. அவளும் உன்னே விரும்புவதாகக் கூறுகிருய். நீ சொல்கிறபடி அவள் செய்வாளா?'' என்று கேட்டான். ராஜ்மோகனும் ''செய்வாள் என்றே நம்புகிறேன். ஏன் ஏதாவது வழி இருக்கிறதா?'' என்று கேட்டான். ஆத்மராமனும் ''எல்லாம் முயன்ருல் முடியாமலா போகப் போகிறது? நான் ஒரு திட்டம் போட்டு வேலே செய்கிறேன். அதற்கு அவள் ஒத்துழைப்பு கிடைத்தால் உன் எண்ணம் நிறைவேறும். பிரச்னேக்கும் ஒரு முடிவு காணமுடியும்'' என்முன்.

ராஜ்மோகனும் ''சரி, நீ உன் திட்டத்தை அமல் படுத்து'' எனக் கூறிஞன். அவன் மறு நாள் தன் தந்தையிடம் போய் ''அப்பா. நமக்கு கடவுள் நம்பிக்கை உள்ளது போல இந்த மூன்று ஜமீன்தாரர்களுக்கும் அவர் மீது நம்பிக்கை



இருக்கத் தானே இருக்கிறது. எனவே எனக்குப் பெண்ணைத் தேர்ந்தெடுக்க கோவிலில் பூஜை நடத்தலாம். அப்போது கடவுள் எப்படி அனுக்கிரக்கிருரோ அதன் படியே நடக்கலாம். அந்த முடி விற்கு எல்லோரும் கட்டுப்பட வேண்டும்'' என்ருன்.

ரங்கபுரி ஜமீன்தாரரும் ஆத்ம ராமன் போட்ட திட்டத்தை முழு வதுமாகக் கேட்டு விட்டு ''பேஷ் இதன்படியே மூன்று ஜமீன்தாரர் களுக்கும் தகவல் அனுப்பி அவர் களது சம்மதியையும் பெறு கிறேன். அவர்களும் தம் பெண் களை அழைத்து வரட்டும். தெய்வ சன்னிதியில் நின்று அவரது தீர்ப் பைக் கேட்போம். அதன்படியே நடப்போம்'' என்ருன். மூன்று ஜமீன்தாரர்களும் தம் புதல்விகளு டன் ரங்கபுரிக்கு வந்தார்கள். ஒரு நல்ல வேளையில் எல்லோரும் ஆல யத்திற்குச் சென்ருர்கள். ராஜ் மோகனும் ஆத்மராமனும் சென் ருர்கள் எனக் கூற வேண்டுமா? அர்ச்சகர் பூஜையை செய்தார்.

பின்னர் அவர் ஒரு பித்தளைத் தட்டில் எண்ணெய் கலந்த குங்கு மத்தைக் கொண்டு வந்தார். அவர் மூன்று ஜமீன்தாரர்களின் புதல்விகளின் வலது கைகளை நீட் டச் சொல்லி ஒரு துணியால் அவர் களது வலது உள்ளங்கைகளைத் துடைத்தார். சுத்தமான அந்த உங்ளங்கைகளை கெட்டியாக மூடிக் கொள்ளச் சொன்ஞர்.



பிறகு அவர் ராஜ்மோகனை அழைத்து அவனது வலது கையில் குங்குமத்தைத் தடவி ''தேவி, நீ எந்தப் பெண்ணை இவன் மணக்க வேண்டும் என்று விரும்புகிறாயோ அவள் கைக்கும் இந்தக் குங்குமம் போகட்டும்'' எனக் கூறியவாறே தேவியை வணங்கினார்.

பின்னர் அவர் மூன்று பெண்களையும் கைகளைத் திறந்து காட்டச் சொன்னார். ரமாதேவியின் உள்ளங்கையில் குங்குமக் கறை படிந்திருந்தது. மற்றவர்கள் கையில் எதுவும் இல்லாமல் சுத்தமாக இருந்தது. அர்ச்சகரும் ''தேவி இந்தப் பெண்ணைத்தான் ராஜ்மோகனின் மனைவியாக வேண்டும் என்று தேர்ந்தெடுத்திருக்கிறாள்'' என்றார். மற்ற இரு ஜமீன்தாரர்களும் ''தேவியின் திருவுள்ளம் போலவே நடக்கட்டும்" என்றார்கள். ரமாதேவிக்கும் ராஜ்மோகனுக்கும் விமரிசையாக விவாகம் நடைபெற்றது. மற்ற இரு ஜமீன்தாரர்களும் அவர்களது புதல்விகளும் இருந்து கல்யாணத்தை நடத்திக் கொடுத்து விட்டுச் சென்றார்கள்.

ரமாதேவியின் கையில் மட்டும் எப்படி சிவப்புக் குங்குமம் ஒட்டியது? அவளது ஒரு விரல் நகத்திற்குள் சிவப்புக் குங்குமம் முன்பே இருந்தது. அர்ச்சகர் உள்ளங்கையைத் துடைத்தாரே ஒழிய நகங்களைத் துடைக்கவில்லை. ரமாதேவியின் நகங்கள் சிவப்பாக இருந்தது அவள் மருதாணி வைத்துக் கொண்டதால்தான் என எண்ணி விட்டார்கள். இந்த மாதிரி விரல் நகத்தினுள் குங்குமத்தை வைத்துக் கொள்ள ஆத்மராமன் சொல்ல அதனையே ராஜ்மோகன் ரமாதேவியை ரகசியமாகச் சந்தித்துக் கூறியிருந்தான். அவளும் அவ்வாறே சிவப்புக் குங்குமத்தை வைத்திருந்தாள். அதனால் தான் உள்ளங்கையில் குங்குமக் கறை படிந்தது.



# சொன்னது சரியே

பிங்களபுரத்தில் பஞ்சு சாஸ்திரி என்ற சோதிடர் இருந்தார். அவருக்கு ஆஸ்தான ஜோதிடர் ஆக வேண்டும் என்ற ஆசை ஏற்பட்டது. ஆனல் அந்நாட்டு மன்னனுக்கு சோதிடத்தில் நம்பிக்கையே கிடையாது. யார் ஆஸ்தான சோதிடர் பதவிக்காக வந்தாலும் அவர்களிடம் ''இந்த உத்தியோகத்தை உங்களுக்கு நான் கொடுக்க நினைத்தேனு இல்லையா ?'' எனக் கேட்டான்.

அவர்கள் ''கொடுக்க நினைத்தீர்கள் ''என்றே சொல்லி வர அரசன் நீங்கள் சொன்னது தப்பு. நீங்கள் போகலாம்'' எனக் கூறி அனுப்பி விடுவான். பஞ்சு சாஸ்திரியும் உத்தியோகம் பெற அரசனிடம் சென்றார். அரசனும் அதே கேள்வியை அவரிடம் கேட்டான்.

பஞ்சு சாஸ்திரியும் ''நீங்கள் எனக்கு உத்தியோகம் கொடுக்க நினைக்கவில்லை'' என்றார். அது கேட்டு ''அரசன் நீங்கள் சொன்னது தப்பு. நான் உங்களுக்கு உத்தியோகம் கொடுக்க நினைத்தேன். ஆனல் நீங்கள் கூறிய சோதிடம் சரியாக இல்லாததால் உங்களுக்கு உத்தியோகம் இல்லை. நீங்கள் போகலாம்'' என்றான்.

பஞ்சு சாஸ்திரியோ ''நான் கூறியது பலித்தே விட்டது. நீங்கள் எனக்கு உத்தியோகம் கொடுக்கவில்லையே. என் சோதிடம் பொய்யென நீங்கள் கூற எனக்கு உத்தியோகம் கொடுத்தால்தான் முடியும்.'' என்றார். அரசன் அவரையே ஆஸ்தான சோதிடராக நியமித்தான்.





# நாம் சமமே!

கந்தசாமி தானிய வியாபாரம் செய்து வந்தான். ஆனால் அவனது மூன்று அண்ணன் மார்களைப் போல வியாபாரத்தில் அவனால் ஏராளமான லாபம் சம்பாதிக்க முடியவில்லை. அதனால் அவனுக்கு எரிச்சல் ஏற்பட்டது.

கந்தசாமியிடம் குப்பன் கணக்கனாக வேலை பார்த்து வந்தான். அவன் ஒரு முறை கந்தசாமியிடம் ''நீங்கள் கொடுக்கும் சம்பளம் எனக்குப் போதவில்லை. நானும் உங்களைப் போல வியாபாரம் செய்யலாமா என்று யோசிக்கிறேன்'' என்றான்.

அது கேட்டு கந்தசாமி சிரித்தவாறே ''அடேயப்பா. எனக்குச் சமமாக இருந்து வியாபாரம் செய்ய ஆசைப்படுகிறாயா?'' என்று கேட்டான். குப்பனும் சற்று யோசித்து விட்டு பதில் எதுவும் கூறாமல் போனான்.

ஒரு நாள் கந்தசாமியும் குப்பனும் தம் ஊரின் எதிர் கரையில் தானியம் வாங்கி வரப் படகில் போனார்கள். படகு கரை சேர்ந்ததுமே அங்கிருந்த கூலி ஆட்கள் ''நீங்கள் இங்கேயே இருங்கள். நாங்கள் மலிவான விலைக்கு பேரம் பேசி தானியம் வாங்கிக் கொடுக்கிறோம். எங்களுக்கு ரூபாய்க்கு ஒரு பைசா தரகு கொடுங்கள் போதும்'' என்றார்கள்.

கந்தசாமியோ சிரித்தவாறே ''அடேயப்பா, என்னைப் போல பேரம் பேசி எனக்குச் சமமாக ஆக நினைக்கிறீர்களா? ஒன்றும் வேண்டாம். நீங்கள் மூட்டை தூக்கினால் போதும்'' என்றான். அந்த ஆட்களுக்குக் கோபம் வந்தாலும் அடக்கிக் கொண்டு பேசாமல் இருந்தார்கள்.

நா. ரங்கசாமி

கந்தசாமி நான்கு படகுகளில் ஏற்றக் கூடிய அளவிற்கு அங்கு தானிய மூட்டைகள் வாங்கினன். கணக்கன் குப்பனிடம் அவற்றைப் படகில் ஏற்றிக் கொண்டு ஊருக்கு வருமாறு சொல்லி விட்டு ஊருக்குக் கிளம்பிச் சென்ருன்.

வீட்டில் கந்தசாமி உட்கார்ந்து கொண்டு குப்பன் எப்போது வருவான் என எதிர்பார்க்கலானன். சற்று நேரத்திற்கெல்லாம் குப்பன் தலையைத் தொங்கப் போட்டுக் கொண்டு வரவே கந்தசாமியும் ''ஏன் இப்படி வருகிருய்? என்ன சமாசாரம்?'' என்று கேட்டான்.

குப்பனும் ''என்னத்தைச் சொல்வேன்? நமது தானிய மூட்டைகளை ஏற்றி வந்த படகுகள் நடு ஆற்றில் கவிழ்ந்து போக எல்லா மூட்டைகளும் ஆற்றில் போய் விட்டன'' என்ருன்.

கந்தசாமிக்குத் தன் தலையில் இடி விழுந்தது போலாயிற்று. அவன் நிறையக் கடன் வாங்கியே வியாபாரம் செய்து வந்தான். சரக்கெல்லாம் முழுகிப் போகவே தன் அண்ணன்மார்களிடம் உதவிக்காக ஓடினன். அவர்களோ ''உன்னை யார் இப்படி கடன் வாங்கி வியாபாரம் செய்யச் சொன்னர்கள்? எங்களால் எதுவும் செய்ய முடியாது'' என்று கூறி கை விரித்து விட்டார்கள்.



கந்தசாமி தன்னிடமிருந்த வீடு நிலம், மற்ற பாத்திரம் பண்டம் என்று எல்லாவற்றையும் விற்று ஒருவாருகக் கடனை அடைத்தான். கையில் கால் காசு கூட மிஞ்சவில்லை. குப்பனே அவனுக்குத் தன் வீட்டில் இருக்க இடம் கொடுத்தான்.

இல்லானை இல்லாளும் வேண்டாள் என்றபடி கந்தசாமியின் மனைவி அவனேடு குப்பனின் வீட்டில் இருக்கத் தனக்கு இஷ்டம் இல்லை என்று சொல்லித் தன் பிறந்த வீட்டிற்குப் போய் விட்டாள்.

குப்பனும் கந்தசாமியும் கூலி வேலை செய்ய ஒரு மேஸ்திரியிடம்

போனார்கள். அவர்களுக்கு கூடைகளில் மண் சுமக்கும் வேலையே கிடைத்தது. கூலியும் நிறையக் கிடைக்கவில்லை.

அப்போது கந்தசாமி மேஸ்திரியிடம் ''நானும் உன்னைப் போல மேஸ்திரியாக ஆகிவிட ஆசைப்படுகிறேன். வீடு கட்டும் வேலையைக் கற்றுக் கொடு'' என்றான்.

மேஸ்திரியோ சிரித்து விட்டு ''ஆசையைப் பார்! நீ எனக்குச் சமமாக இருக்கவா பார்க்கிறாய்?'' என்று கேட்டான். அப்போது கந்தசாமிக்கு தான் மற்றவர்களிடம் அது போலக் கேட்டது நினைவிற்கு வந்தது.

சில நாட்களுக்குப் பிறகு அவர்கள் செய்த அந்த வேலை முடிய அங்கு பெரிய வீடும் கட்டித் தயாராகியது. குப்பன் கந்தசாமிக்குத் தெரியாமலேயே அவனது மாமனார் வீட்டிற்கு ''வியாபாரத்தில் நிறைய லாபம் கிடைக்கவே புதிய வீடு கட்டி விட்டேன். கிரகப்பிரவேசம் நடக்கிறது. எல்லோரும் வந்து சேரவும்'' என கந்தசாமி சொன்னது போல தகவல் அனுப்பினான்.

கந்தசாமியின் மனைவியும் வந்தாள். குப்பன் கந்தசாமியையும் அவன் மனைவியையும் குளித்து விட்டு வரச் சொன்னான். அவர்கள் வந்ததும் புத்தாடை தந்து அணிந்து கொள்ளச் சொல்லி மணை மீது உட்காரச் சொன்னான். புரோகிதர்கள் 'கிரகப்பிர வேசம்' நடத்தினார்கள்.

கந்தசாமி இதை எல்லாம் கண்டு திகைக்கவே குப்பனும் ''இந்த வீடு உங்களுடையதே. உங்கள் தானியம் ஆற்றில் போய் விடவில்லை. நீங்கள் எங்களை உங்களை விடத் தாழ்வாக நினைத்ததால் உங்களுக்குப் பாடம் கற்பிக்கவே நான் இப்படிச் செய்தேன்'' என்றான். கந்தசாமியும் ''குப்பா, என் கண் திறந்தது.'' எனக் கூறினான்.






# உபகாரி உலகநாதன்

அரசலூரிலுள்ளவர்களை இரண்டு வித பயங்கள் பீடித்து வந்தன. ஒன்று திருடர் பயம். மற்றது பேய் பிசாசு பயம். ஊரில் ஒரு புறமுள்ள பழங்கால மாளிகை ஒன்றில் பிசாசுகள் இருப்பதாக அஞ்சி மக்கள் சூரியன் மறைந்ததுமே கதவுகளை மூடிக் கொண்டு தம் வீட்டுக்களினுள் முடங்கிக் கிடந்தார்கள்.

இந்த சமயத்தில்தான் உலகநாதன் தன் நாயுடன் அந்த ஊருக்கு வந்தான். அவனுக்கு யாருமே உற்ருர் உறவினர் என்று இல்லை. அந்த நிலையிலும் அவன் பிறருக்கு உதவியே வந்தான். அரசலூரில் மக்கள் பயந்து கோழைகளாக இருப்பதைக் கண்டு அவர்களது பயத்தைப் போக்கத் தீர்மானித்துக் கொண்டான். எனவே அவன் அந்தப் பாழடைந்த மாளிகையையே தன் இருப்பிடமாகத் தேர்ந்தெடுத்து தன் நாயுடன் போய் அங்கு தங்கிஞன். முதல் நாளிரவு அவனை எந்தப் பேயும் பிசாசும் ஒன்றும் செய்யவில்லை. அதனுல் பிசாசு இல்லை என்பதைக் கண்டு கொண்டான். இனி திருடர்கள் பிரச்னை ஒன்றுதானே. அதைத் தீர்த்து விட்டால் ஊரில் பயம் இல்லாமல் போய் விடும்.

அவன் மறுநாளே அவ்வூர் மணியக்காரனிடம் போய் ''ஐயா, நான் திருடர்களை எப்படியாவது கண்டு பிடிக்கிறேன். அல்லது விரட்டி விடுகிறேன். ஆனுல் நான் சொல்கிறபடி ஊரில் தண்டோரா போடுங்கள். இரவு ஏழு மணிக்கு மேல் யாராவது தெருவில் நடமாடினுல் அவர்களை நான் திருடன் எனப் பிடித்து வைத்து விடுவேன்

இராம. நாராயணன்



சொல்கிறீர்கள்'' என்று கேட்க லாம் என எண்ணினுன்.

அப்போது அந்தத் திருடன் ''வா, என் இருப்பிடத்திற்குப் போகலாம். நீ திருடியதில் எனக்குப் பங்கு கொடுத்தேயாக வேண்டும்'' என்று கூறி குணவர்மனின் கையைப் பிடித்துக் கொண்டான். குணவர்மனும் அதற்கு இணங்கி அவனேடு சென்ருன்.

இருவரும் ஊருக்கு 'வெளியே ஒரு பாறைப் பகுதியில் ஒரு குகையை அடைந்தார்கள்.

குணவர்மன் அந்தத் திருடனிடம் ''உன் ஆட்கள் எங்கே?'' என்று கேட்ட போது அந்தத் திருடன் பலமாகக் கை தட்டினுன்.

மறு நிமிடமே மற்ருெரு குகையிலிருந்து இருபது வீரர்கள் வந்து குணவர்மனைச் சூழ்ந்து கொண்டார்கள். குணவர்மன் திகைத்துப் போனுன்.

அப்போது அந்தத் திருடன் ''அடே திருட்டுப் பயலே, என் நாட்டில் திருடுவது என்பது சுலபமான வேலையல்ல. என் ஆட்சியில் நடந்த முதல் திருட்டு இது. உன்னை இரண்டு நாட்கள் கழித்து தர்பாரில் எல்லோர் முன்னிலையிலும் விசாரித்து தண்டனை அளிக்கிறேன்'' என்ருன்.

குணவர்மனும் அது தன் தந்தையின் குரலே எனக் கண்டு மகிழ்ந்து போனுன். அவனும் பதில் பேசாமல் வீரர்களோடு சிறைச் சாலைக்குச் சென்ருன்.

சிறைச் சாலையில் அடைபட்டதும் அவன் தன் நண்பனுன சிறைச் சாலை அதிகாரியை அழைத்து தன் வேஷத்தைக் கலைத்து தான் இன்னுன் எனக் கூறி சிறையிலிருந்து வெளியேறி அரண்மனைக்குப் போனுன்.

மறு நாள் காலை குணவர்மனுக்குப் பட்டாபிஷேகம். அது முடிந்ததும் தானவர்மன் தன் மகனிடம் ''ஒருநாளும் இல்லாதபடி நேற்றிரவு ஒரு திருடனை நான் பிடித்தேன். இனிமேல் நீ நாட்டில் திருடர்களைப் பற்றி எச்சரிக்கை



என்று போட்டால் போதும். மற்றதை நான் கவனித்துக் கொள்கிறேன்'' என்ருன்.

மணியகாரனும் ஊரில் திருடர்கள் இல்லாமல் ஒழிந்தால் போதும் என எண்ணி அவ்வாறே தண்டோரா போட்டான். அன்று முதல் இரவில் உலகநாதனும் தன் நாயுடன் ஊர் தெருக்களில் திரிந்து தெருவில் ஏதாவது ஒரு காரணத்திற்காக வீட்டிலிருந்து வெளியே வந்தவர்களை எல்லாம் பிடித்துக் கொண்டு ஊர் எல்லையிலுள்ள பிசாசு மாளிகையில் கொண்டு போய் அடைக்கலானன்.

அவ்வாறு அடைக்கப்பட்டவர்களுக்கெல்லாம் அம்மாளிகையில் பிசாசோ பேயோ இல்லை என்பது தெரிந்து விட்டது. தினமும் இரவில் இரண்டு பேர்களோ மூவரோ அகப்படுவதும் உலகநாதன் அவர்களைப் பிடித்துக் கொண்டு போய் பாழடைந்த மாளிகையில் அடைத்து பிசாசு இல்லையென நிரூபித்தும் விடுவித்து வந்தான். இதனல் ஊரில் உள்ளவர்களுக்கெல்லாம் பேய் பிசாசு பற்றிய பயம் மறைந்து போய்விட்டது.

தினமும் உலகநாதன் ஊர்த் தெருக்களில் தன் நாயுடன் திரிந்து வந்ததால் உண்மைத் திருடர்கள் தலை காட்டாமல் இருந்தனர்.

ஒருநாள் உலகநாதனைக் காண இரு வாலிபர்கள் பாழடைந்த மாளிகைக்கு வந்தார்கள். அவர்கள் அவனிடம் ''ஐயா, நீங்கள் ஊரில் திருடர்களே தலை காட்ட முடியாமல் செய்து விட்டீர்கள். ஆனல் நம்மிடையே மறைந்துள்ள திருடர்களைப் பிடிக்காமல் இருக்கிறீர்களே'' என்று கேட்டார்கள்.

உலகநாதனும் ''நம்மிடையே மறைந்திருக்கும் திருடர்களா? யார் அவர்கள்?'' என்று கேட்டான். அவர்களும் ''சமூக விரோதிகள் தாம் அவர்கள். இந்த ஊர் கணக்குப் பிள்ளையை எடுத்துக் கொள்ளுங்கள். அவரிடம் எங்கள் தகப்பனர் உயிரோடு இருந்த போது பத்திரம் எழுதிக் கொடுத்து




கடனுக பணம் வாங்கி இருந்தார். பிறகு பணத்தைத் திருப்பித் தந்து விட்டார். ஆனுல் இந்த பெரிய மனுஷரோ அவர் எழுதிக் கொடுத்த கடன் பத்திரத்தைத் திருப்பிக் கொடுக்கவில்லே. இறக்கு முன் என் தந்தை இதை எங்களிடம் கூறி பத்திரத்தைத் திரும்பி வாங்கிக் கொள்ளும்படி சொன்ஞர். நாங்கள் போய்க் கேட்ட போது என் தகப்பஞர் கடனேத் திருப்பிக் கொடுக்கவில்லே எனக் கூறி எங்கள் வீட்டை ஆக்கிரமித்துக் கொண்டு விட்டார். இப்போது நாங்கள் இருக்க இடமில்லாமல் தவிக்கிருேம்'' என்ருர்கள்.

உலகநாதனும் ''நீங்கள் கூறுவது உண்மையோ பொய்யோ எனக்குத் தெரியாது. ஆனுலும் விசாரித்துப் பார்க்கிறேன்'' எனக் கூறி அவர்களே அனுப்பிஞன். அன்றிரவு உலகநாதன் ஊர்த் தெருக்களில் சுற்றி வந்த போது கணக்குப் பிள்ளேயின் வீட்டில் கன்னம் வைத்து ஒரு ஓட்டையை சுவரில் உண்டாக்கி விட்டுப் போஞன்.

மறுநாள் உலகநாதன் மணியக்காரனிடம் போஞன் ''கணக்குப் பிள்ளேயைக் கொஞ்சம் அழைத்து வரச் சொல்கிறீர்களா?'' என்ருன். மணியக்காரனும் தகவல் சொல்லி அனுப்பவே கணக்குப் பிள்ளேயும் வந்து சேர்ந்தான். அவன் வரும்போதே உலகநாதனிடம் ''யாரோ என் வீட்டுக் சுவரில் கன்னம் வைத்திருக்கிருர்கள்!'' என்ருன். உலகநாதனும் ''அதுபற்றிப் பேசவே உங்களே அழைத்தது. இது மனிதனின் வேலேயல்ல. ஒரு பிசாசின் வேலே'' என்ருன்.

கணக்குப் பிள்ளேயும் ''பிசாசின் வேலேயா? உங்களுக்கு அது எப்படி தெரியும்?'' என்று கேட்டான். உலகநாதனும் ''நான் இருக்கும் இடம் பேய் பிசாசுகள் உலாவும் மாளிகை. நாம் அவற்றின் வழிக்குப் போகாமல் இருந்தால் அவை நம்மை ஒன்றும் செய்யாது.

ஆனால் தினமும் சபாபதி என்ற ஒரு பிசாசு என் முன் வந்து அழுகிறது. அதற்கு நீங்கள் ஏதோ துரோகம் செய்து விட்டீர்களாம். நீங்கள் இப்போது இருக்கும் வீடு அது உயிருடன் இருந்த போது அதற்குச் சொந்தமானதாமே! உண்மையா?'' எனக் கேட்டான்.

அதைக் கேட்ட கணக்குப் பிள்ளை வெலவெலத்துப் போனான். பிறகு ''ஆமாம்'' என்றான். உலகநாதனும் ''இன்றிரவு என் இருப்பிடத்திற்கு வாருங்கள். அந்தப் பிசாசு என்ன சொல்கிறது என்பதை நீங்களே நேரில் கேளுங்கள்'' என்றான்.

மணியக்காரனும் ''ஆமாம். கணக்குப் பிள்ளை! நீங்கள் இன்று போய் சபாபதியின் ஆவி என்ன சொல்கிறது என்று கேளுங்களேன்'' என்றான். அப்போது கணக்குப் பிள்ளை ''ஐயோ. நான் மாட்டேன். அந்தப் பிசாசு என் கழுத்தை நெரித்துக் கொன்று விடும். அவன் வீட்டை நான் அக்கிரமமாகத்தான் ஆக்கிரமித்துக் கொண்டிருக்கிறேன். இப்போதே அவன் எழுதிக் கொடுத்த பத்திரத்தை உங்கள் முன் கிழித்துப் போட்டுவிட்டு அந்த வீட்டையும் சபாபதியின் மகன்களிடம் ஒப்படைத்து விடுகிறேன். இவ்வளவு நாட்கள் அதில் இருந்ததற்காக வாடகையாக ஆயிரம் ரூபாயும் அவர்களுக்குக் கொடுத்து விடுகிறேன். என்னை அந்தப் பிசாசு ஒன்றும் செய்யாமல் விட்டால் போதும்'' என்றான் நடுநடுங்கியவாறே.

உலகநாதனும் கணக்குப்பிள்ளையிடமிருந்து சபாபதியின் வீட்டை வாங்கி உடனே அவனது இரு மகன்களிடம் ஒப்படைத்தான். கடன் பத்திரத்தையும் கணக்குப் பிள்ளையிடமிருந்து அப்போதே வாங்கிக் கிழித்து எறிந்து விட்டு அவன் தன் நாயுடன் வேறு ஊருக்குக் கிளம்பிச் சென்றான்.





# பிறவியின் பயன்

தட்சசீலப் கல்கலேக்கழக மாணவர்கள் படிப்பு ஒரு ஆண்டில் முடிந்த போது ஒரு பேராசிரியர் மாணவர்களைப் பார்த்து ''மானிடப் பிறப்பு மிகவும் உயர்ந்தது. நாட்டிற்கோ, சமூகத்திற்கோ, பிறருக்கோ உதவ இந்தப் பிறப்பு உதவவேண்டும். இதனை வீணக்கக் கூடாது'' என்ருர்.

''மானிடப் பிறப்பு எடுத்து வீணக்கவும் முடியுமா?'' என சில மாணவர்கள் பேராசியரிடம் கேட்க அவரும் ''ஓ! அப்படியும் செய்ய முடியும். மானிடப் பிறவியை நற்பணிக்காகப் பயன்படுத்துவதே மேல். அப்படிச் செய்யா விட்டால் அது வீணே ஆகும். நான் இதற்கு ஒரு கதை கூறுகிறேன் கேளுங்கள்'' எனக் கூறி கதை சொல்லலாஞர். அங்கதேசத்தை அனங்கன் என்ற மன்னன் ஆண்டு வந்தான். அவன் திறமையானவன். ஆயினும் அவனது நாட்டில் குழப்பங்கள் ஏற்பட்டுக் கொண்டே இருந்தன. அதைப் பயன்படுத்திக் கொண்டு ஒரு மன்னனும் படை எடுத்து வந்தான்.

படை எடுத்து வந்த மன்னனை எதிர்க்கவும் உள் நாட்டுக் குழப்பத்தை அடக்கவும் அனங்கன் தன் படை பலத்தை அதிகரிக்க வேண்டியதாயிற்று. அதற்காக எல்லா வாலிபர்களேயும் படையில் சேர வற்புறுத்தலாஞன்.

அந்நாட்டில் அம்பு எய்வதில் சிறந்த இரு வேட்டைக்காரர்கள் இருந்தார்கள். அவர்களை மன்னன் அழைத்து வரும்படி கட்டளை இட்டான். வீரர்களும் அவர்களைத் தேடிச் சென்றனர். அந்த இரு வேட்டைக்காரர்

காரை. கந்தப்பன்

களுக்கு வேட்டையாடுவதில் தான் இஷ்டமே யொழிய போர் புரிவதில் இஷ்டமே இல்லை. ஆகையால் வீரர்களின் கண்களில் படாமல் அவர்கள் காட்டிற்குள் ஓடி விட்டார்கள்.

ஆனால் அவர்களுக்கு அன்று சாப்பிட எதுவுமே கிடைக்கவில்லை. மாலை வேளைக்கு ஒரு மான் குட்டி அவர்கள் கண்ணில் பட்டது. இருவரும் ஒரே சமயத்தில் அதன் மீது அம்புகளை எய்தனர். இரு அம்புகளும் அதன் மீது பட்டு அது இறந்து போயிற்று.

அப்போது இரு வேட்டைக்காரர்களும் யார் அந்த மான் குட்டியைக் கொன்றது என்ற விவாதத்தில் இறங்கினார்கள். இருவரும் தாமே அதனைக் கொன்றதாகக் கூறி சச்சரவு செய்து கொள்ளலானார்கள். அவர்களிடையே ஆரம்பித்த விவாதம் முற்ற கைகலப்பு ஏற்பட்டது. முடிவில் இருவரும் தம் குத்து வாள்களை எடுத்துக் கொண்டு சண்டையிட்டார்கள். கடைசியில் இருவரும் ஒருவரையொருவர் குத்திக் கொண்டு இறந்தார்கள்.

பேராசியர் இந்தக் கதையைக் கூறி ''இந்த இரு வேட்டைக்காரர்களும் நாட்டிற்காகவோ சமூகம் பயன் அடைவதற்காகவோ தம் உயிரை அர்ப்பணிக்க இஷ்டப்படாமல் ஒரு அற்ப விஷயத்திற்காகத் தம்முள் சண்டை போட்டுக் கொண்டு ஒருவரையொருவர் குத்திக் கொண்டு இறந்தார்கள். இவ்விதம் உயிர் துறந்தது அவர்களுக்கும் பயன்படாமல் யாருக்குமே பயன்படாமலும் போய் விட்டது. இப்படிப்பட்ட பிறப்பினால் யாருக்கு என்ன பயன்?'' என்று கேட்டான்.

மாணவர்களும் ''ஆமாம். மானிடப் பிறப்பால் யாருக்காவது ஏதாவது ஒரு உபயோகம் இருக்கவே வேண்டும்'' எனக் கூறி விடை பெற்றுச் சென்றார்கள்.






இராமர் அயோத்தியை விட்டு வனவாசம் மேற் கொண்டு முழு வதுமாகப் பதினன்கு வருடங்களை யும் கழித்து விட்டார். அவர் அயோத்திக்குத் திரும்பி வரும் போது பரத்துவாஜ முனிவரின் ஆசிரமத்தில் வந்து தங்கினர். அப்போது பதினன்கு ஆண்டுகள் முடிந்து விட்டன. பரதன் சரி யாகப் பதினன்கு ஆண்டுகள் காத் திருப்பதாகக் கூறியதை இராமர் எண்ணிக் கொண்டு அந்த முனிவரி டம் ''சுவாமி, பரதனின் ஆட்சி எப்படி உள்ளது? மக்கள் சுகமாக இருக்கிறார்களா?'' என்று கேட்டார்.

பரத்துவாஜரும் ''ஆகா. பர தன் காவிதரித்து உனது பாது கைகளை வைத்து உனது பிரதி நிதி யாகத் தான் நாட்டை நன்கு ஆண்டு வருகிறன். நீ எப்போது திரும்பி வரப் போகிருய் என்று எதிர்பார்த்தவாறே இருக்கிறன். நாட்டு மக்களும் க்ஷேமமாகவே இருக்கிறார்கள்'' என்றார்.

இராமரும் ''அப்படியாளுல் நான் திரும்பி வரும் தகவலை முன் கூட்டியே அவனுக்குத் தெரிவிக்க வேண்டும். இன்றோடு பதினன்கு வருடகாலம் முடிவடையப் போகிறது'' என்றார்.

பாரத்துவாஜரும் ''வேகமாகச் செல்லப் கூடியவராகப் பார்த்து அனுப்பு'' என்றார். இராமரும் அனுமாரை அழைத்து ''நீங்கள் இப்போதே கிளம்பிப் போய் நந்



திக்கிராமத்திலுள்ள என் சகோதரனிடம் நான் ஊர் திரும்பும் தகவலைக் கொடுங்கள். வழியில் மலைச் சாதியினர் மன்னனான குகனையும் பார்த்து நான் திரும்பி வருவதைக் கூறுங்கள்'' என்றார்.

இராமர் கூறியதைக் கேட்டதும் அனுமார் ஆகாய வழியாகவே அயோத்திக்குக் கிளம்பிச் சென்றார். முதலில் அவர் சிருங்கபேரிபுரத்தை அடைந்து வேடுவ மன்னனான குகனைக் கண்டார். அவனிடம் இராமர் இராவணனை வென்று சீதையுடனும் வானர வீரர்களுடனும் ராட்சஸ பிரமுகர்களுடனும் அயோத்திக்குத் திரும்பி வந்து கொண்டிருக்கிறார்கள் என்பதைக் கூறினார். அதைக் கேட்டதும் குகன் மகிழ்ந்து போனான். அவன் அனுமாரிடம் ''இப்போதே கிளம்பிப் போய் நந்திக் கிராமத்திலுள்ள பரதனுக்கும் தகவல் கொடுங்கள்'' என்றான். அனுமாரும் உடனேயே நந்திக்கிராமத்திற்குக் கிளம்பிச் சென்றார்.

நந்திக் கிராமம் ஒரு முனிவரின் ஆசிரமம் போல அமைதியுடனும் செடி கொடி மரங்கள் நிறையக் கொண்டதாயும் இருந்தது. அங்கிருந்து அயோத்திக்கு இரண்டே நாழிகை நேரத்தில் போய் விடலாம்.

பரதன் காவியுடை அணிந்து மான் தோலைக் கட்டிக் கொண்டு இராமரின் பாதுகைகளை அரியாசனத்தில் வைத்து அதன் முன் அமர்ந்திருந்தான். பதினான்கு ஆண்டுகள் முடியப் போகிறதே, இராமர் வருகிறாரா என்று பார்த்துக் கொண்டே இருந்தான்.

அனுமார் பரதனின் முன் போய் நின்று வணங்கி ''நான் இராம தூதன். அனுமான். இப்போது அவர் பரத்துவாஜ முனிவரின் ஆசிரமத்தில் தங்கி இருக்கிறார். தான் வந்து கொண்டிருக்கும் தகவலை முன் கூட்டியே தங்களிடம் அறிவிக்க என்னை அனுப்பியுள்ளார்'' என்றார்.

அது கேட்டு பரதன் ''அப்படியா? என் அண்ணு திரும்பி வந்து கொண்டிருக்கிருரா? சீதாதேவியார் க்ஷேமமா? காட்டில் அவர்களுக்கு எவ்விதக் கஷ்டமும் ஏற்படவில்லையே'' எனக் கேட்டான்.

அப்போது அனுமார் பரதன் இராமரை சித்திர கூட பர்வதத்தில் சந்தித்துத் திரும்பிய பிறகு நடந்தவற்றையெல்லாம் விவரமாகக் கூறிஞர். அது கேட்டு இராமர் க்ஷேமமாக சீதையுடனும் இலட்சுமணனுடனும் மற்றும் பல மாவீரர்களுடனும் வருவதை அறிந்து பரதன் உள்ளம் பூரித்துப் போஞன்.

அவன் உடனேயே தன்னைச் சுற்றிலும் நின்ற மந்திரிகளிடம் ''அண்ணு, இராமர் வனவாசத்தை முடித்துக் கொண்டு திரும்பி வந்து கொண்டிருக்கிருர். இப்போது பரத்துவாஜ முனிவரின் ஆசிரமத்தில் தங்கி இருக்கிருராம். அவரை வரவேற்க தக்க ஏற்பாடுகளைச் செய்யுங்கள். தோரணங்கள் கட்டி அலங்கார வளைவுகள் அமைத்து பாதைகளைச் செப்பனிட்டு நீர் தெளித்து மலர்களைத் தூவுங்கள். வாத்தியங்கள் முழங்கட்டும். பாடகர்கள் பாட்டிசைக்க, நடன மாதர்கள் நடனம் ஆடட்டும். இராமருக்கு



நாம் எல்லோருமாகச் சேர்ந்து குதூகல வரவேற்பை அளிப்போம்'' எனக் கூறிஞன்.

அந்த ஏற்பாடுகளையெல்லாம் கூடவே இருந்து கவனித்துச் செய்யும்படி பரதன் தன் தம்பியான சத்துருக்கனனை அனுப்பிஞன். சத்துருக்கனனும் நந்திக்கிராமத்திலிருந்து அயோத்திக்குச் செல்லும் பாதையைச் செப்பனிட்டு சீராக்கி மலர்களைத் தூவிஞன். ஆங்காங்கே தோரணங்களை கட்டிஞன். அலங்கார வளைவுகள் அமைத்தான். வாசனை திரவியங்களைத் தெளித்து எங்கும் நறுமணம் கமழச் செய்தான். இராமரை வரவேற்க உற்சாகத்



துடன் எல்லோரும் ஏற்பாடுகளைச் செய்யலானார்கள். அமைச்சர்களும் அவர்களது குடும்பத்தவரும் ஒன்று கூடினார்கள். அந்தணர்கள் வேதமந்திரங்களை கோஷித்து கொண்டிருந்தனர்.

யானைகள் மீது பல வீரர்கள் அமர்ந்து சென்றனர். வேறு பலர் அழகிய குதிரைகளின் மீது அமர்ந்து சவாரி செய்தனர். மாபெரும் வீரர்கள் ரதங்களில் அமர்ந்து செல்ல, படை வீரர்கள் சாரிசாரியாகச் சென்றனர். இவ்விதமாக நான்கு படைகளும் இராமருக்கு உற்சாக வரவேற்பை அளிப்பதில் ஈடுபட்டன. மந்திரிகள் பலரும் நந்திக்கிராமத்தை அடைந்தனர். தசரதரின் மனைவியரும் பல வாகனங்களில் அமர்ந்து நந்திக்கிராமத்தை வந்து அடைந்தார்கள். எல்லோரும் இராமரின் வருகையை எதிர்நோக்கிக் காத்துக் கொண்டிருந்தார்கள்.

பரதன் இராமரின் பாதுகைகளைத் தன் தலை மீது வைத்துக் கொண்டு அண்ணனை வரவேற்க முன் செல்லலானான். நந்திக்கிராம எல்லையில் அவன் பிராம்மணர்கள் சூழ்ந்து நிற்க தன் மந்திரிகளோடும் பல பிரமுகர்களோடும் நின்று கொண்டிருந்தான் எல்லோர் கையிலும் பெரிய பெரிய மாலைகள் இருந்தன. பரதனும் அரச சின்னங்களான வெண் குடை, வெண் சாமரங்கள் செங்கோல் ஆகியவற்றையும் தன்னோடு எடுத்து வந்திருந்தான்.

நேரம் ஆக ஆக பரதன் பொறுமையை இழக்கலானான். அவன் அனுமாரைப் பார்த்து ''இராமர் இன்னும் வரவில்லையே. நீங்கள் கூறியது உண்மைதானே! அவர் இங்குதானே வந்து கொண்டிருக்கிறார்?'' என்று கேட்டான்.

அனுமாரும் "ஆமாம். பரத்துவாஜ முனிவர் எல்லோருக்கும் விருந்தளித்து உபசரிப்பதால் ஒரு வேளை இந்த தாமதம் ஏற்பட்டிருக்கலாம். அவர்களிடம் குபே

ரனின் புஷ்பக விமானம் இருக்கிறது. அதில் ஏறி நொடிப் பொழுதில் வந்து விடலாம். நீங்கள் கவலைப்படவே வேண்டாம். அதோ விமானம் கூட வந்து விட்டது. பாருங்கள்'' என்றார்.

எல்லோரும் ''அதோ இராமர் வந்து விட்டார்!'' என்று மகிழ்ச்சி ஆரவாரம் செய்தார்கள். இராமரைக் காண எல்லோரும் எழுந்து நின்று கொண்டார்கள்.

இராமர் விமானத்தில் வந்து இறங்கியதுமே பரதன் அவரை எதிர் கொண்டழைத்து ''சொன்ன சொல் தவறாமல் பதினான்கு ஆண்டுகள் முடிந்ததும் வந்து விட்டீர்கள். அண்ணா, நாங்களெல்லோரும் தங்களைக் கண்டதுமே எவ்வளவு மகிழ்ச்சி அடைந்துள்ளோம்!'' என்றான்.

பரதன் சீதாதேவியை வணங்கினான். இலட்சுமணனைக் கட்டித் தழுவிக் கொண்டு ஆனந்தக் கண்ணீர் வடித்தான். வானர வீரர்களை வணங்கி வரவேற்றான். விபீஷணனையும் மரியாதையுடன் வரவேற்றான்.

இராமரும் தன் தாயாரான கௌசல்யை, சுமித்திரை கைகேயி, ஆகிய மூவரையும் நமஸ்கரித்தார். அப்போது பரதன் இராமரது பாதுகைகளை அவரிடம் ஒப்படைத்து ''அண்ணா! இவ்வளவு நாட்களாக இவற்றை அரியாசனத்தில் வைத்து நான் தங்களது பிரதிநிதியாக இந்த நாட்டை





ஆண்டு வந்தேன். இப்போது எல்லாவற்றையும் உங்களிடம் ஒப்படைக்கிறேன். ஏற்றுக் கொள்ளுங்கள்'' என வேண்டினன்.

இராமரும் பரதன் கொடுத்த பாதுகைகளை ஏற்ருர். பின்னர் தான் ஏறி வந்து விமானத்தைக் குபேரனுக்கே அனுப்பி விட்டார். அதற்குப் பிறகு இராமரது பட்டாபிஷேகத்திற்கான முகூர்த்த வேளை குறிப்பிடப்பட்டது.

இராமர், இலட்சுமணர், பரதன், சத்துருக்கனன் ஆகிய நால்வரும் மங்களஸ்நானம் செய்தார்கள். பட்டாடைகள் அணிந்து கொண்டார்கள். வாசனை திரவியங்கள் பூசிக் கொண்டும் ஆபரணங்களை அணிந்தும் கொண்டார்கள். விபீஷணனும் சுக்கிரீவனும் மற்ற வீரர்களும் குளித்துப் புத்தாடை அணிந்து கொண்டார்கள்.

சீதாதேவியும் மங்களஸ்நானம் செய்ததும் அவளை நன்கு அலங்கரித்தார்கள். அப்போது அவர்களையெல்லாம் அயோத்திக்கு அழைத்துச் செல்ல ரதம் தயாராக வந்து நின்றது.

தசரதனின் மந்திரிகள் முன்னதாகவே அயோத்திக்குப் போய் வசிஷ்டரைக் கலந்து ஆலோசித்து பட்டாபிஷேகத்திற்கான ஏற்பாடுகளைச் செய்யலானுர்கள்.

இராமரும் எல்லோரிடமும் சுக்கிரீவனின் நட்பும் உதவியும் தனக்கு எவ்வாறு கிடைத்தது என்பதையும் விபீஷணன் எப்படியெல்லாம் தனக்கு உதவினன் என்பதைக் கூறினர். எல்லோரும் அதைக் கேட்டு ''ஆகா!'' என வியந்தார்கள். இவ்வளவுக்கும் காரணமாக இருந்த அனுமாரைப் புகழ்ந்தார்கள்.

இராமர் அயோத்தியில் அரண்மனைக்குள் சென்ருர். சுக்கிரீவனும் விபீஷணனும் தங்குவதற்குத் தக்க ஏற்பாடுகள் செய்யப்பட்டன. சுக்கிரீவனும் நான்கு தங்கக் குடங்களை எடுத்து ஜாம்பவான், அனுமான், வேகதர்சி, ரிஷபன் ஆகிய நான்கு மாவீரர்களை

அழைத்து ''நீங்கள் நால்வரும் ஆளுக்கு ஒரு குடமாக எடுத்துப் போய் நான்கு திசைகளிலுள்ள கடல்களிலிருந்து குடத்தில் நீர் கொண்டு வாருங்கள். இராமரது பட்டாபிஷேகத்திற்கு இது தேவை'' என்றான்.

அவர்களும் கடல்களிலிருந்து நீரைக் கொண்டு வந்தார்கள். பல நதிகளிலிருந்தும் புனித நீர் கொண்டு வரப்பட்டது. அவற்றால் அபிஷேகம் செய்து இராமருக்கு முறைப்படி பட்டாபிஷேகம் நடைபெற்றது.

இராமர் நவரத்தின சிம்மாசனத்தில் சீதையுடன் அமர்ந்து கொண்டார். மந்திரிகள் அந்தணர்கள் எல்லோரும் வாழ்த்துக்கள் கூறினார்கள். நகரப் பிரமுகர்களும் ஒவ்வொருவராகத் தம் வாழ்த்துக்களைக் கூறியவாறே இராமருக்கு தம்மரியாதையைத் தெரிவித்துக் கொண்டார்கள். இராமருக்கு சத்துருக்கனன் வெண் குடையைப் பிடித்தான். சுக்கிரீவனும் விபீஷணனும் இராமரின் இருபுறங்களில் நின்று வெண்சாமரம் வீசலானார்கள். இராமர் தன் பட்டாபிஷேக வைபவத்தை ஒட்டி பிராம்மணர்களுக்கு பசுக்களை தானமாக அளித்தார். தங்கநாணயங்களை தட்சணையாக வழங்கினார்.

பின்னர் அவர் ஒரு உயரிய வேலைப்பாடு மிகுந்த முத்து மாலையை சீதையிடம் கொடுத்து ''இதனை நீ மிகச் சிறந்த வீரருக்குப் பரிசாகக் கொடு'' என்றார். சீதையும் அதனை அனுமாருக்குக் கொடுத்து அவரை கௌரவித்தாள்.

இராமரும் மற்ற வானர வீரர்களுக்கும் பரிசுகளை வழங்கினார். பட்டாபிஷேகம் முடிய விபீஷணன் இலங்கைக்குத் திரும்பினான். இராமரும் பரதனுக்கு யுவராஜ பட்டாபிஷேகம் நடத்தி ஆட்சி புரிந்து வரலானார்.





# சாந்த் பீபீ

சாந்த் பீபீ அகமது நகர் சுல்தான் ஹசன் நிஜாம்ஷாவின் மகள். அவள் மிக அழகானவள். சிறு வயதில் அந்தப்புரத்திலேயே இருந்தாலும் நல்ல உலக ஞானமும் துணிச்சலும் தைரியமும் கொண்டவள் எனப் பெயர் பெற்ருள்.

பீஜப்பூருக்கும் அகமது நகருக்குமிடையே ஷோலாப்பூர் யாருக்கு சொந்தமானது என்ற தகராறு இருந்தது. இந்தத் தகராறைத் தீர்த்து நட்புறவு கொள்ள அகமது நகர சுல்தான் தன் மகள் சாந்த் பீபியை பீஜப்பூர் சுல்தான் அலி அதில்ஷாவிற்கு மணம் செய்து வைத்து ஷோலாப்பூரை சீதனமாகக் கொடுத்து விட்டான்.





ஆனுல் பண வெறி பிடித்த சில பிரபுக்கள் சாந்த் பீபீயின் ஆட்சியை வெறுத்து அவளையும் இப்ராஹீமையும் கொல்ல சதி செய்தார்கள். இதை அறிந்த சாந்த் பீபீ இப்ராஹீமை அழைத்துக் கொண்டு தன் பிறந்த இடமான அகமது நகருக்குச் சென்ருள்.



சுல்தான் அதில்ஷா கி. பி. 1850-ல் கொல்லப்பட்டான். அவனுக்குக் குழந்தையே இல்லே. எனவே அவனது தம்பியின் மகனுன இப்ரஹீம் என்ற ஒன்பது வயது சிறுவனே சுல்தானுக்கி சாந்த் பீபீ அவன் சார்பாக ஆட்சி புரிந்து வந்தாள். அவளது ஆட்சி திறம்பட இருந்ததால் மக்கள் யாவரும் அவளேப் போற்றிப் புகழ்ந்தார்கள்.

அப்போது சாந்த் பீபீயின் சகோதரன் அகமது நகர சுல்தானுக இருந்தான். அவன் பைத்தியம் போல் நடந்து கொண்டதால் அவனே அவனது மகனுன ஹசனே கொன்று விட்டான். ஹசனுக்கு எதிராகப் படைத் தலேவர்கள் கலகம் செய்து அவனேக் கொன்று அவனது சகோதரனின் மகனே சுல்தானுக ஆக்கினுர்கள். இந்த சம்பவங்களால் சாந்த் பீபீயின் மனம் சற்று கலகலத்தது.





அகமது நகரில் ஏற்பட்ட இந்தக் குழப்பங்கள் பற்றி டில்லியிலுள்ள முகலாய சக்கரவர்த்தியான அக்பருக்குத் தெரிய வந்தது. அகமது நகரைக் கைப்பற்ற இதுவே சரியான சமயம் என எண்ணி ஒரு பெரிய படையை அவர் அகமது நகருக்கு அனுப்பினுர். அகமது நகரின் படையை நடத்த சரியான சேனுதிபதி இல்லாததால் சாந்த் பீபீயே படையின் தலேமைப் பொறுப்பை ஏற்ருள்.

முகலாயர்கள் அகமது நகர் கோட்டையை முற்றுகை இட்டு அதன் வாசல்களைத் தகர்க்க முயன்றார்கள். சாந்த் பீபீ வாசல்களையும் மதில் சுவரையும் நன்கு பாதுகாக்கலானாள். ஆனால் முகலாயரிடம் பீரங்கிகள் இருந்ததால் மதில் சுவரின் ஒரு பக்கத்தைத் தகர்த்து விட்டார்கள். ஆனால் அப்போது மாலையாகி இருட்டி விட்டதால் முகலாயப் படை அகமது நகருக்குள் போகத் துணிவு கொள்ளவில்லை.





சாந்த் பீபீ அந்த அபாய நிலையை கண்டு இரவோடு இரவாக இடிந்த மதில் சுவரை கற்களைக் கொண்டு மீண்டும் கட்டி அப்பகுதியில் படை வீரர்களையும் காவலுக்கு வைத்தாள்.

அந்த இடத்தில் மட்டுமல்லாமல் சாந்த் பீபீ கோட்டை மதில் மீது பீரங்கிகளை வைத்துக் கொண்டு மறுநாள் காலையில் கோட்டையைத் தாக்க வந்த முகலாயப் படைகளை எதிர்த்தாள்.



# போட்டோ வாக்கியப் போட்டி :: பரிசு ரூ. 25

**இந்தப் போட்டியின் வெற்றிப் பெற்ற தலைப்புகள் 1978 பிப்ரவரி மாத இதழில் வெளியிடப்படும்**



S. Paramasivan

★



Sambhu Mukherjee

★ தலைப்புகள் ஒரு வார்த்தையிலிருந்து நாலைந்து வார்த்தைகளுள் இருக்கலாம். இரு தலைப்புகளுக்கும் தொடர்பு இருக்க வேண்டும்.

★ டிசம்பர் 10 தேதிக்குள் போட்டிக்கான தலைப்புகள் எமக்கு வந்து சேரவேண்டும்.

★ எம்மிடம் வந்து சேர்ந்த தலைப்புகளில் நாம் சிறந்ததாகக் கருதும் தலைப்புகளுக்கு ரூ. 25 பரிசு. இது இரு தலைப்புகளுக்கும் சேர்ந்ததே.

★ தலைப்புகளை தபால் கார்டில் மட்டுமே எழுதி அம்புலிமாமா 'போட்டோ வாக்கியப் போட்டி' சென்னை-26 என்ற முகவரிக்கு அனுப்பவும்.

---

## அக்டோபர் மாதப் போட்டி முடிவு

முதலாவது போட்டோ : முற்றும் துறந்த நிலை
இரண்டாவது போட்டோ : சற்றே மறந்த நிலை

பரிசு பெற்றவர்: திருமதி பொன்னி ஆனந்த்,
23/எ, பாரதி வீதி ஈரோடு 638001

பரிசுத் தொகை ரூ. 25 ம் இம்மாதக் கடைசிக்குள் அனுப்பிவைக்கப்படும்.

# வாய்புரத்தின் பாதுகாப்பு நடவடிக்கைகள்

சில மாதங்களாக,
அமில அரக்கன் (COOH*)
வாய்புரத்தின் மீது படை
யெடுக்கப் போவதாக
பயமுறுத்திக்
கொண்டிருக்கிறான். போர்
தளவாடங்கள் இறக்குமதி
செய்ய வாய்புரத்து
சட்டசபையில் தீர்மானம்
நிறைவேறுகிறது.



விரைவில்
தளவாடங்கள்
வந்து
இறங்குகின்றன.



படை உடனடியாக பற்கோட்டையைப்
பலப்படுத்தும் வேலையில் ஈடுபடுகிறது...
அதற்குள் ஒரு சோதனை ஏற்படுகிறது.




ஒரு இரவில் எல்லோரும்
தூங்கும் நேரம், அமில
அரக்கனின் முற்றுகையாளர்
கள் தாக்குதல் நடத்து
கின்றனர்.



வாய்புரத்து மக்கள்
கடுமையாக போரிடு
கின்றனர். ஆயினும்
எதிர்பாராத தாக்குதல்
என்பதால், அமில
அரக்கனோடு அவர்
களால் தாக்குப்
பிடிக்க முடிய
வில்லை.



ஒரே ஒரு
வழிதான்
உண்டு.




பின்னர்..பினாகா-எஃப் தனதுபயங்கர ஆயுதமான பினாகா ஃப்ளோரைட் டூத்பேஸ்ட்டோடு விரைகிறார்.
Binaca


அமில அரக்கா! உன்னை என்ன செய்கிறேன் பார்!


பின்வாங்குங்கள்! தப்பி ஓடுங்கள்...


பினாகா-எஃப் மற்றும் வாய்புரத்து படை இவற்றின் கூட்டு முயற்சியால் அமில அரக்கனின் படை சின்னாபின்னம் ஆகியது.


வெற்றி!
பிழைத்தோம்!
பினாகா-எஃப் நீடூழி வாழ்க!


அன்பர்களே! பழைய ஆயுதங்கள் போதாது. பற்கோட்டையைப் பாதுகாக்க, நாள்தோறும் நீங்கள் இருமுறை பினாகா ஃப்ளோரைடினால் துலக்க வேண்டும் என்பதை ஒரு நாளும் மறக்க வேண்டாம்.
Binaca Fluoride
Binaca Fluoride

# NP க்ராக்கீஸ் சூயிங் கம்

கும்மாளமான நேரங்களுக்கு--N.P. க்ராக்கீஸ் மேலும் குஷியூட்டும். காரணம், மென்றிட மென்றிடக் குன்ருமல் நின்றாறும் புதுமைச் சுவையுடையது N.P. க்ராக்கீஸ்... வேலேயோ, விளேயாட்டோ எந்த நேரத்தையும் சோபிக்க வைக்கும் சுவை.

N.P. க்ராக்கீஸ், பல விதமான இன்பச் சுவைகளிலே வருகுது, சுபாரி சுவை உள்பட. பிடித்தமானதை எடுத்துக் கொள்வதே மலைப்பாயிருக்கும் உங்களுக்கு.

NP இது ஒன்றுதான் தரத்திற்கு ISI முத்திரை பதிந்த சூயிங் கம்.









தி நேஷனல் பிராடக்ட்ஸ்,
பெங்களூர் 560 006

## இளைஞர்களுக்குக் களியாட்டம்—
## சுவை கூட்டும் NP க்ராக்கீஸ் சூயிங் கம் கொண்டாட்டம்!

Dattaram NP-171 TAM

நாட்டில் 80 சதவிகிதம் ஜனங்கள் கிராமத்தில் இருக்கிறார்கள். அவர்களிடம் பணம் இல்லை. பாங்க், தேசீய மயமாக்கப்படட்வுடன் அவர்களுடைய பிழைப்புக்கு உதவ நெருங்கி வந்ததால், அவர்கள் சுதந்திரமாக செயல்பட முடிகிறது.



















கிட்டு, பாலு, நினைவிருக்கட்டும். யூகோபாங்க் சிறியவர் – பெரியவர், ஏழை-பணக்காரர், எல்லோருக்கும் நண்பன்—எல்லோருக்கும் உதவுவதற்கென்றே உள்ளது யூகோபாங்க்.



‘கோல்ட் ஸ்-பாட்டுக் கச்சேரி,
நவரச்ச சுவை மாரி!’







குதூகல நகை கொஞ்சும் சுவை: கோல்ட் ஸ்பா

Creative Unit-A 2780